


### அயர்லாந்து போதுத் தேர்தல்.

அயர்லாந்து பொதுத் தேர்தலில் மிஸ்டர் தேவலிரா கட்சிக்கே வெற்றி யேற்படுமென்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஐரிஷ் பார்லிமெண்டு கலேக்கப்பட்டபோது மிஸ்டர் தேவலிராவின் குடியாசுக் கட்சிக்கு 70 ஸ்தானங்களும் அவர்களை யாதரித்த தொழிற் கட்சிக்கு 7 ஸ்தானங்களுமிருந்தன. மிஸ்டர் காஸ்கிரேவ் கட்சிக்கு 54 ஸ்தானங்களும சுயேச்சை வாதிகளுக்கு 13 ஸ்தானங்களும் குடியானவர் கட்சிக்கு 4 ஸ்தானங்களுமாக எதிர்க்கட்சிக்கு 71 ஸ்தானங்களிருந்தன. 4 ஸ்தானங்கள் இடைத் தேர்தல் ஏற்பட்டுக் காலியாகவிருந்தன. இப்போது தேர்தலுக்கு தேவலிரா கட்சி 98 அபேக்ஷகர்களை நிறுத்தி யிருக்கிறது. அதில் 80 பேர்கள் வெற்றி பெறுவது நிச்சயமென்று கருதப்படுகிறது. தொழிற்கட்சி இனியும் மிஸ்டர்தேவலிராவையாதரித்துவரத்தீர்மானித்திருக்கிறது. டப்ளின் லார்டு மேயர், மிஸ்டர் பிர்ன் உடன்படிக்கையை ஆதரிக்கும் எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து ஒரு தேசியக் கட்சியாக அமைந்து வேலை செய்ய வேண்டுமென்று கூறியதை மிஸ்டர் காஸ்கிரேவ் ஆதரித்த போதிலும் தேர்தலுக்குள் அதை நடத்திவைக்க அவகாசமில்லை. மிஸ்டர் தேவலிரா இப்போது பார்லிமெண்டைக் கலேத்துப் பொதுத் தேர்தலுக்கு ஏற்பாடு செய்தது மிகவும் சாமர்த்தியமான காரியமென்று கூறப்படுகிறது மிஸ்டர் தேவலிரா வெளியிட்டிருக்கும் தம் கட்சித் திட்டத்தில், தாம் அதிகாரத்திற்குத் திரும்பி வந்தால், செனேட் ஏற்றுலும் இல்லாவிடினும் ராஜ விச்வாசப் பிரமாணம் எடுபட்டு விடுமென்றும், நிலவருஷாசனத்தை நிரந்தரமாக அயர்லாந்தே வைத்துக் கொண்டு விடுமென்றும், அதன் வசூல் பொருளாதார நிலைமைக்கேற்றபடி மிகவும் குறைக்கப்பட்டு விடுமென்றும் இங்கிலாந்து அயர்லாந்தின் விஷயங்களில் தலையிடாமலிருந்துபூரண சமத்துவத்தை ஒப்புக்கொண்டால் அதனுடன் சிநேகமாக விருக்கத் தயாரென்றும் பிரிட்டனுடன் பேச்சு நடத்தவும், தங்கள் கட்சித்திட்டத்தை நன்குநடத்திவைக்கவும் தமக்குத் தனிமையான மெஜாரிட்டி அவசியமாயிருப்பதாயும் கூறியிருக்கிறார். மிஸ்டர் காஸ்கிரேவ் தமது கட்சித் திட்டத்தில் தாம் அதிகாரத்திற்கு வந்தால் ஐரிஷ் சாமான்களுக்கு 3 தினங்களுக்குள் விற்பனை ஸ்தலங்களைப் பெற்று வியாபார அபிவிருத்தியை உண்டு பண்ணி விடுவதாகக் கூறியிருக்கிறார். டப்ளினில் காஸ்கிரேவ் கட்சியினர் நடத்திய ஒரு பொதுக் கூட்டத்தில் ஜெனரல் முல்காஹி பேசுகையில் கலவரமேற்பட்டுத் துப்பாக்கிப் பிரயோகம், தடியடி முதலியவை நடந்தன. முடிவில் போலிஸார் வரவழைக்கப் பட்டனர். குடியரசுக் கட்சியில் அமிதவாதப் பிரிவினர் பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரத்தை யாதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர். டப்ளினில் தேர்தல் கலவரத்தில் காஸ்கிரேவ் கட்சியைச் சேர்ந்த வெள்ளைப்படையைச் சேர்ந்த 27 பேர்கள் காயமடைந்து ஆஸ்பத்திரிக்கனுப்பப்பட்டனர். பாலிங்டிரியக் என்ற விடத்திலும் இம்மாதிரி காஸ்கிரேவ் கட்சிக் கூட்டத்தில் கலவாம் நடந்தது. 5 பேர்கள் பிரக்ஞையற்று ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டனர். பலர் கைது செய்யப்பட்டனர்.

---



பம்பாய் (தாதர்) ஸ்ரீ வியாயமந்திரத்தில் மாணவிகள் கர்லா போடும் காக்ஷி. ஜி. எஸ். ஏ.



மயிலாப்பூர் ஸ்ரீ சாரதா வித்தியாலயத்தின் உதவிக்காக சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் ஹாலில் விஜயநகரம் பெரிய மகாராணி தலைமையில் ஒரு தமாஷா நடத்தப்பட்ட போது எடுத்தபடம். சகோதரி சுப்பலக்ஷிமி அம்மாள், மிஸஸ் எஸ். வி. ராமமூர்த்தி, மிஸஸ் கோபாலஸாமி ஐயங்கார், மிஸஸ் ஜெயராமய்யர், ஸ்ரீமதி அம்புஜம்மாள் முதலியவர்களும் படத்தில் காணப்படுகின்றனர். பி. என். ஏ.

### சீனுவில் யுத்தம்.

வட சீனுவில்: ஷான்ஹைகுவான் என்ற விடத்தில் ஜப்பானியப் படைகளுக்கும் சீனப்படைகளுக்கும் மீண்டும் சண்டை யாரம்பித்திருக்கிறது. ஜப்பானிய விமானங்களிலிருந்து வெடிகுண்டுகள் போடப்பட்டு பீரங்கிகளாலும் சுடப்பட்டது. காரணமின்றி ஜப்பானியர் தாக்கியதாக சீனப்படைத் தலைவர் அறிவித்திருக்கிறார். ஜப்பானியப்படைகள் வெளியிலிருந்தும் அங்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. போலீஸ் ஸ்டேஷனில் இரண்டு வெடிகுண்டுகள் கண்டு பிடிக்கப்பட்டதே தாங்கள் தாக்கியதற்குக் காரணமென்று ஜப்பானியர்கள் கூறுகின்றனர். சீனர்கள் வெடிகுண்டு விஷயம் கற்பனையே என்று கூறுகின்றனர். ஷான்ஹைகுவான் நகரம் ஜப்பானியப் படைகளால் பிடித்துக் கொள்ளப்பட்டுவிட்டது. சீனப் படைகள் பின் வாங்கிவிட்டன. இந்த நகரம் சீனுவில் மஞ்சூரிய எல்லைக் கருகிலிருக்கிறது. இந்தச் சண்டை சமரஸமேற்படுவதை அசாத்தியமாக்கி விட்டதாக ஸர்வதேச சங்கக் கோஷ்டியில் பேசிக் கொள்ளப்படுகிறது. அமைதியை நிலை நிறுத்தச் சீனப்படைகள் ரயில்பாதையிலிருந்து 2 மைல் தூரம் பின் வாங்க வேண்டுமென்று ஜப்பான் ராஜி நிபந்தனையை அறிவித்திருக்கிறது. பிரிட்டிஷ் கடற்படை உத்தியோகஸ்தர் ராஜி செய்து வைக்க முற்பட்டிருக்கிறார்.

---

### ஸ்பேயினில் கலகம்.

ஸ்பெயினில் பார்ஸிலோனு மாகாணத்தில் கலகமேற்பட்டுப் போலீஸாருக்கும் தொழிலாளர்களுக்கும் பலமான சண்டை நடந்தது. அராஜகக் கட்சியினர் பொது ஸ்தாபனக் கட்டடங்களைக் கைப்பற்ற முயன்றனர். இதனுல் 10 பேர்கள் கொல்லப்பட்டு 21 பேர்கள் காயமடைந்தனர். 22 பேர்கள் கைது செய்யப்பட்டனர். கொல்லப்பட்டவர்களில் ஒரு ஸ்திரீயுமிருந்தாள். வீடுகளின் ஜன்னல்களிலிருந்து போலீஸார்மீது சுடப்பட்டது. போலீஸ் தலைமை ஸ்தலம் மெஷின் பீரங்கிகளால் சூழ்ந்துகொள்ளப்பட்டு

விட்டது. போக்குவாத்து நிறுத்தப்பட்டுவிட்டது.

---

### மகராஜ் குமாருக்கு அபராதம்.

தரன்பூர் மகராஜ் குமார் கேம்பிரிட்ஜில் தமது மோட்டார்காரை அஜாக்கிரதையாக ஓட்டியதாயும் பெயரை அறிவிக்க மறுத்ததாயும் விபத்து நேர்ந்ததைப் போலீஸாருக்கு அறிவிக்கத் தவறிவிட்டதாயும் ஒரு பஸ்ஸிற்கு முன் குறுக்கே சென்று மோதுமாறு செய்ததாயும் 4 பவுன் அபராதம் விதிக்கப்பட்டார்.

---

### பேர்ஸிய எண்ணெய்த் தகராறு.

லண்டனில் பெர்ஸிய தூதராக விருந்துவந்த மீர்ஸா ஆலி கோலிகான் அன்ஸாரி பெர்ஸியாவுக்குத் திருப்பியழைக்கப்பட்டுவிட்டார். முதலாவது கார்யதரிசிபெர்லினுக்கு மாற்றப்பட்டுவிட்டார். எண்ணெய் தகாராறுக்கும் இதற்கும் சம்பந்தமில்லையென்று கூறப்படுகிறது. எண்ணெய்க் கம்பெனித் தகாராறு உள்நாட்டு விஷயமென்றும் ஸர்வதேச சங்கம் இதில் தலையிடமுடியாதென்றும் எப்படியிருந்தபோதிலும் புதிய ஒப்பந்தத்திற்கான பேச்சு டெஹிரனிலேயே நடக்க வேண்டுமென்றும் பெர்ஸிய கவர்ன்மெண்டு அறிவித்திருக்கிறது. பெர்ஸியாவில் விளம்பர போர்டுகள்சுதேச பாஷையிலேயே இருக்க வேண்டுமென்று உத்தாவிடப்பட்டிருக்கிறது.

---

### பிரேஞ்சுக் கப்பலுக்குத் தீ விபத்து.

அட்லாண்டிக் என்ற விலையுயர்ந்த பிரெஞ்சுப் பிரயாணிக் கப்பல் இங்கிலீஷ் சானலில் தீப் பற்றிக்கொண்டு அடியோடு எரிந்துவிட்டது. இது 50 கோடி பிராங்க் செலவழித்துக் கட்டப்பட்டது. விபத்துநேரிட்டபோது இதில் 260 மாலுமிகள் மாத்திரமிருந்தனர். அபாய அறிவிப்பின் பேரில் பல கப்பல்கள் உதவிக்குச் சென்றன. சுமார் 20 பேர்கள் தவிர மற்றவர்கள் மீட்கப்பட்டு விட்டனர். சமீபத்தில் பல பிரபல பிரெஞ்சுக் கப்பல்கள் தீக்கிரையாகியிருப்பதால் இதைப்பற்றித் தீர விசாரணை நடத்தவேண்டுமென்று பிரான்ஸில் கிளர்ச்சியேற்பட்டிருக்கிறது. பிரான்ஸ் என்ற இன்னொரு பிரஞ்சுக் கப்பலிலும் இவ்வாரம் தீப்பற்றிக்கொண்டது. ஆனல் இரண்டு மணி நேரத்தில் இது அணைக்கப்பட்டுவிட்டது.

---

### வியாதியஸ்தர் நர்ஸால் சுடப்பட்டார்.

பல்கேரியாவில் சமீபத்தில் நேர்ந்த கலவரத்தில் மாசிடோனியா என்ற பத்திரிகையின் ஆசிரியர் எடிமாப் சுட்டுக் கொல்லப்பட்டார். அவரைக் கொலை செய்த டிராஜனுப் காயங்களுடன் ஆஸ்பத்திரியில் சிகிச்சையிலிருக்கையில் அங்கிருந்த ஒரு நர்ஸ் ஒரு கைத்துப்பாக்கியால் அவனைச் சுட்டுக் கொன்றுவிட்டுப் போலீஸாரிடம் சென்று தான் பழிவாங்கிவிட்டதாகக் கூறிச் சரணமடைந்தாள்.

---

### அரசர் கட்சிக் கைதிகள் தப்பியோடி விட்டனர்.

ஸ்பெயினில் அரசர் கட்சியைச் சேர்ந்த 29 ராஜீயக் கைதிகள் மேற்கு ஆப்பிரிக்காவில் கைதிகள் ஸ்தலமான ரயோடி ஆர்டோ என்ற விடத்திலிருந்து ஒரு சிறிய படகில் தப்பியோடிப்போய்விட்டனர். மாஜி அரசர் அல்பான்ஸோவின் நெருங்கிய உறவினர் பிரின்ஸ் அல்பான் ஸோ டி போர்பனும் இதில் ஒருவர். சிறைச்சாலை அதிகாரி வேலையிலிருந்து நீக்கப்பட்டு விட்டார்.

---



அமெரிக்க பாப்டிஸ்டு மிஷன் சங்கக் கார்யதரிசி டாக்டர் ஜே. வி. ராபின்ஸ், மிஸஸ் ராபின்ஸ், டாக்டர் ப்ராங்கு டபிள்யூ. பாடில் போர்டு, மிஸஸ் பாடில்போர்டு, மிஸ் காம்பெல் முதலியவர்கள் இங்குள்ள மிஷனரிகளுடன் கல்வி சம்பந்தமாக யோசிக்கச் சமீபத்தில் சென்னைக்கு வர்தபோது எடுத்த படம். பி பி பி

### வாரத்திற்கு 30 மணி நேர வேலை

வாரத்திற்கு 30மணி நேரமே வேலை வாங்க வேண்டுமென்று வற்புறுத்துவதற்காகப்பொது வேலை நிறுத்தம் நடத்தத் தயாரா யிருப்பதாக யுனைடெட்ஸ்டேட்ஸ் தொழிலாளர் ஐக்கியச் சங்கத் தலைவர் மிஸ்டர் கிரீன் அறிவித்திருக்கிறார்.

---

### எகிப்திய மந்திரிசபை ராஜிநாமா.

அன்னியநாட்டு மந்திரி, போக்குவரத்து மந்திரி, நீதி மந்திரி ஆகிய மூவரும் ராஜினமாச் செய்து விட்டதால் எகிப்திய மந்திரிசபை ராஜிநாமாச் செய்துவிட்டது. பிரதம மந்திரி ஸிட்கிபாஷாவே மீண்டும் மந்திரி சபையைத் திருத்தியமைப்பார் என்று கூறப்படுகிறது.

---

### சிலோன் அரசியல்.

பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரியாபீஸ் நிரந்தர உதவிக் காரியதரிசி ஸர் சாம்யுல் வில்ஸன், மலேயாவில் விசாரணை நடத்தி விட்டுச் சிலோனுக்கு வந்திருக்கிறார். சிலோன் அரசியல் அனுபவத்தில் நடத்திவைக்கப் படுவது சம்பந்தமாக அவர் அங்கு விசாரணை நடத்தினர். மந்திரி சபையும் தேசியக் கமிட்டியும் அவரைப் பேட்டிகண்டன. மந்திரிகள் இப்போதைய அரசியலில் அனுபவத்தில் உள்ள கஷ்டங்களை விளக்கினர்கள். தேசியக் கமிட்டி, சிலோன் வாசிகள் குடியேற்ற நாட்டந்தஸ்துடன் பூரண சுய ஆக்ஷியை வேண்டுவதாக வற்புறுத்தியது.

---

### மிஸ்டர் கூலிட்ஜின் மரணம்.

மாஜி யுனைடெட் ஸ்டேட்ஸ் குடியாசுத் தலைவர் மிஸ்டர் கால்வின் கூலிட்ஜ் தமது 61 வது வயதில் மார்படைப்பால் சென்ற வாரம் மரண மடைந்தார். இவர் 1923 முதல் 1929 வரையில் தலைவராசவிருந்தார்.

---

### ஜேர்மனியின் கடன்.

ஜெர்மனிஇவ்வருஷம்மார்ச்சு 13ந் தேதி யுனைடெட் ஸ்டேட்ஸிற்குக் கொடுக்க வேண்டிய தவணை 330 லக்ஷம் மார்க்கை ஒத்திவைக்க நேருமென்று ஜெர்மன் கவர்ன்மெண்டு உத்தியோக முறையில் அறிவித்திருக்கிறது.

---

### மாஜி மந்திரிமீது வழக்கு.

பிரெஞ்சு செனேட் மெம்பர்களானஷாமக், வியெல்லார்டு, பிரதிநிதி சபை மெம்பர் பெசின் முதலியவர்கள் ஸ்விட்ஜர்லாந்து பாங்கு ஒன்றில் கணக்கு வைத்துக்கொண்டு அன்னிய தேச செக்கியூரிட்டிகள் மீது கொடுக்கவேண்டிய வரியை எமாற்றிவிட்டதாக அவர்கள்மீது பிரான்ஸில் வழக்குத் தொடாப்பட்டிருக்கிறது. ஷாமக் ஒரு மாஜி மந்திரி. குறிப்பிட்ட தேதிக்குள் வரிகளைச் செலுத்தாதவர்கள் 100-க்கு 10 வீதம் சேர்த்துச் செலுத்துமாறு செய்யப்படுமென்று கவர்ன்மெண்டு அறிவித்திருக்கிறது.

---

### இதாலிய கிராமத்தில் கலவரம்.

இதாலியில் மாண்ட்ஸ்ஸாண்டியாகப் என்றவிடத்தில் ஜனங்களுடைய ஸ்தலக் குறைகளைத் தெரிவித்துக் கொள்ளுவதற்காக கிராமமண்டபத்தில் சுமார் 300 பேர்கள் கூடி ஆர்பாட்டம் நடத்தினர்கள். பிறகு பஸ்ஸானே போலீஸ் ஸ்டேஷன் தாக்கப்பட்டது. கற்கள் எறியப்பட்டுத் துப்பாக்கிகளால் சுடப்படவே போலீஸார் தற்காப்புக்காகச் சுடநேர்ந்தது மூவர் கொல்லப்பட்டு நால்வர் காயமடைந்தனா.

---

# இந்திய வர்த்தமானம்

### சட்டமறுப்பு இயக்கம்.

சென்றவாரம் சட்டமறுப்பு இயக்க வருஷாந்தரக் கொண்டாட்டத்தை ஒட்டி ஆமதாபாத், டில்லி, பம்பாய், சென்னை, உள்பட இந்தியாவின் பல பாகங்களிலும் பலர் கைது செய்யப்பட்டனர். ஆனால் ஆமதாபாத்தில் கைதியான சுமார் 70 பேர்கள் பிறகு விடப்பட்டுவிட்டனர். பம்பாயில் ஸ்ரீமான் பி. எப். பரூச்சா கைதியானவுடன் அவர் வீட்டிற்கு வந்த ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸராவ் என்பவரைப் போலீஸார் கைதுசெய்து அவரிடமிருந்து ஏதோ முக்கிய கடிதங்களைக் கைப்பற்றினார்களாம். பம்பாய் ஹைக்கோர்ட்டில் மூன்று பாரிஸ்டர்களுடைய அறைகள் சோதனை போடப்பட்டன. டாக்டர் கே. பி. பரூச்சாவும் ஸ்ரீமான்பியாரிலாலும் கைதியாயினர். பார்ஸி வகுப்பைச் சேர்ந்த பாரிஸ்டர் மாஸானி 12 மாதம் சிறைத் தண்டனையும் 100 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். ஸ்ரீமான் மோகன் லால் வோரா கைதியானார். ஆமதாபாத்தில் போயனிக்ஸ் அச்சுக்கூடம் போலீஸாரால் சோதனை போடப்பட்டது. மறியல் செய்ததாயும் விளம்பரங்களை ஒட்டியதாயும் 10 தொண்டர்கள் கைதியாயினர். கூர்ஜர காங்கிரஸ் ஸர்வாதிகாரி ஸ்ரீமான் பி. டி. வர்மா 2 வருஷம சிறைவாசமும் 150 ரூபாய் அபராதமும்விதிக்கப்பட்டார். பாட்னாவில் ஸ்ரீமான் கிருபாளினி கைது செய்யப்பட்ட போது அவரிடமிருந்து போலீஸார் கைப்பற்றிய கடிதத்தைக் கொண்டு பாபு ராஜேந்திரப் பிரஸாது கைது செய்யப்பட்டார். பாட்னா காங்கிரஸ் ஸர்வாதிகாரி ஸ்ரீமான் ராம வல்லப சதுர் வேதி கைதியானார். போலீஸார் பாட்னாவில் 10 ஹோட்டல்களைச் சோதனைபோட்டு 18 தொண்டர்களைக் கைது செய்தனர். வேறு 7 தொண்டர்களும் கைதியாயினர். பீஹார் காங்கிரஸ் ஸர்வாதிகாரி ஸ்ரீமான் மதுராப்பிரஸாது 18 மாதம் சிறைத்தண்டனைவிதிக்கப்பட்டார். ஸர்ச்சுலைட் பத்திரிகையிடம் இன்னொரு 1500 ரூபாய் ஜாமீன் கேட்கப்பட்டிருக்கிறது. சாந்தபூரில் வரிகொடா இயக்கப் பிரசாம் வழங்கிய 3 தொண்டர்கள் கைதியாயினர். காசி பாரிஸ்டர் ஸ்ரீமான் வி.பி. ஸின்ஹா 18 மாதமும் 200 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டர். பாட்னாவில் 2 ஸ்திரீகள் 3 மாதம் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டனர். லாகூர் ஜமீன்தார்பத்திரிகையிடம் புதிதாக 4000 ரூபாய் ஜாமீன் கேட்கப்பட்டிருக்கிறது. நாகபுரியில் 4 தொண்டர்கள் ஊர்வலத்தில் கைதியாயினர்.



பம்பாய்க்கு விஜயம் செய்திருக்கும் மிஸ்டர் ஜார்ஜ் பெர்னார்டுஷா மிஸஸ் அத்தியா பீகத்துடன் பேசும் போது எடுத்த படம். ஜி. எஸ் ஏ.

சென்னையில் மறியல் செய்ததாக 10 தொண்டர்கள் கைதியாயினர். திருச்சி சிறையில் கோவிந்தஸாமி கிளாக்குடையர் என்ற ராஜியக் கைதி மரணமடைந்தார். கள்ளிக்கோட்டையில் 20 மறியல் தொண்டர்கள் கைதியாயினர். தூத்துக்குடியில் ஸ்ரீமான் டேவிட் ராஜகோபாலுக்கு 6 மாதமும் ஸ்ரீமதி ஜானகிபாய்க்கு $2\frac{1}{2}$ வருஷமும் விதிக்கப்பட்டது. மதுரைத் தொண்டர்கள் பலவந்தமாகக் கலைக்கப்பட்டனர்.

---

### சிறைச்சாலை அதிகாரிகளுக்கு தண்டனை.

நாஸிக்சிறையில் அமிர்தலால் வஸி என்ற சட்டமறுப்புக் கைதியை பூட்ஸ்காலால் உதைத்து அடித்துக் காயப்படுத்தியதாகச் சிறைச்சாலை உத்தியோகஸ்தர்கள் மீது கொண்டுவரப்பட்ட வழக்கில் ஜெயிலர் ரோச்சுக்கு 12மாதம் கடுங்காவலும் ஜெயலர் ஜாக்ஸனுக்கு 9 மாதம் கடுங்காவலும் கைதி வார்டர் ஹுஸேனுக்கு ஒரு மாதம் கடுங்காவலும் விதிக்கப்பட்டது. மற்ற இரண்டு எதிரிகள் விடுதலை செய்யப்பட்டனர்.

---

### ✓ஆலயப் பிரவேச விஷயம்.

டாக்டர் சுப்பராயனின் ஆலயப் பிரவேச மசோதாவுக்குத் துரிதமாக அநுமதி கொடுக்குமாறு கவர்னர் ஜெனரலுக்குச் சிபார்சு செய்ய வேண்டுமென்று ஸ்ரீமான் வி. டி. அரசு சென்னை சட்டசபையில் ஒரு பிரேரணை கொண்டுவரப் போவதாக அறிவித்திருக்கிறார். கவர்னருக்கு இது சம்பந்தமாக ஒரு பத்திரம் வாசித்துக் கொடுக்கவும் முயற்சி நடந்து வருகிறது. தாழ்ந்த வகுப்பினர்களை ஆலயங்களுக்குள் அனுமதிப்பது சம்பந்தமாக ஹிந்துக்களின் அபிப்பிராயத்தை விசாரித் தறியவும் அவசியமானல் நிபந்தனைகளைப் பற்றிச்சிபார்சு செய்யவும்ஹிந்துக்களடங்கிய கமிட்டி ஒன்றை நியமிக்குமாறு ஸ்ரீமான் ஸாமி வெங்கடாசலம் செட்டி ஒரு பிரேரணை யனுப்பி யிருக்கிறார். ஸநாதன தர்மிகளின் தூது ஒன்று ராஜப் பிரதிநிதியைக் கல்கத்தாவில் பேட்டி கண்டு டாக்டர் சுப்பராயன் மசோதாவுக்கு அனுமதி கொடுக்கக் கூடாதென்று வற்புறுத்தியது. கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபை கல்கத்தாவில் கூடி இந்த விஷயத்தைப்பற்றி யோசித்தது. சீக்கிரத்தில் முடிவு தெரியு மென்று கூறப்படுகிறது. தாம் ஒரு ஸநாதன தர்மியே என்று அறிவித்து ஸநாதன தர்மிகளுக்கு மகாத்மாஜி ஒரு வேண்டுகோளை வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் தந்தியனுப்பியதன் பேரில் மிஸ்டர் ஸி. எப். ஆண்டிரூஸ் இந்தியா மந்திரியைப் பேட்டி கண்டு டாக்டர் சுப்பராயன் மசோதாவுக்கு அனுமதி கொடுக்குமாறு ராஜப் பிரதிநிதிக்கு அறிவிக்குமாறு வற்புறுத்தினார்.

---

### ஆள்வார் கலகம்.

ஆள்வார் சமஸ்தானத்தில் மியோ ஜாதியினரின் கலகம் வலுத்திருக்கிறது. இன்னும் பலவிடங்களைத் தாக்கிக் கொள்ளையடித்தனர். சிலவிடங்களில் கோவில்களும் சேதப்படுத்தப்பட்டன. சமஸ்தானப் படைகள் கலவரப்பிதேசங்களுக்கு அனுப்பப்பட்டதுடன் டில்லியிலிருந்து பிரிட்டிஷ் படைகளும் அனுப்பப்பட்டிருக்கின்றன. ஒரு ஆகாய விமானமும் சென்றிருக்கிறது. மகாராஜா பட்டத்தைத் துறக்கப் போவதாக ஒரு வதந்தி உலாவியது. அது ஆதாரமற்றதென்று மகாராஜாவே மறுத்துவிட்டார். கலவரப் பிரதேசங்களில் உள்ள தபால் தந்தியாபீஸ்களைச் சில தினங்களுக்கு மூடி வைக்க அதிகாரிகள் முடிவு செய்திருக்கின்றனர்.

---

### ரயில்வே வேலை நிறுத்த முடிவு.

எம். எஸ். எம். ரயில்வே வேலை நிறுத்தம் முடிந்து தொழிலாளர்கள் சென்ற திங்கட்கிழமை வேலைக்குத் திரும்பி விட்டனர். ஆனால் அரக்கோணத்தில் 63 பேர்களும்

ஹூப்ளியில் 300 பேர்களும் வேலைக் கெடுத்துக் கொள்ளப்படவில்லை. இடையில் தொழிலாளர் தலைவர்களும் ஷெரிப் கமிட்டியும் கலந்து யோசித்ததில் அரக்கோணத்தில் 63 பேர்களை வேலைக் கெடுத்துக் கொள்ள மறுப்பதைப்பற்றி ராஜி யேற்படுத்த முடியவில்லை. இப்படி இரண்டு இடங்களிலும் இத்தனை தொழிலாளர்களை வெளியே அனுப்பிவிட்டது ஒப்பந்தத்தை மீறியதாகுமென்றும் ஆயினும் தாங்கள் டிசம்பர் 23-ந் தேதி ஒப்பந்தப்படி நடப்பதாயும் சட்டப்படி இவர்களுக்குப் பரிகாரம் பெற வழியுண்டாவென்று பார்க்கப் போவதாயும் தலைவர்கள் அறிவித்திருக்கின்றனர்.

——

### பம்பாயில் இன்னுமொரு கலவரம்.

சென்ற வாரம் மீண்டும் பம்பாயில் வகுப்புக் கலவரம் ஒன்று தோன்றியது. ஒரு ஹிந்துப் பையன் அடித்த கிரிக்கெட்டு பந்து அவ்வழியே சென்ற ஒரு பட்டாணி மீது பட அவன் அந்தப் பையனை அடித்தான். உடனே மற்றச்சிறுவர்களும்சில ஹிந்துக்களும் அந்தப் பட்டாணியை அடித்தனர். அந்தப் பட்டாணி திரும்பிச் சென்று வேறு பல முஸ்லீம்களுடன் மீண்டும் வந்து சிறுவர்களைத் தாக்கினான். ஸ்தலத்திலிருந்த ஹிந்துக்கள் பையன்களைக் காப்பாற்ற வந்தனர். கை கலந்த சண்டை நடந்தது. பிறகு டிராம்கார்களில் சென்றவர்களும் வழிப்போக்கர்களும் தாக்கப்பட்டனர். மூவர் கொல்லப்பட்டு 23 பேர்கள் காயமடைந்தனர். போலீஸார் ஸ்தலத்திற்குச் சென்று கலவரத்தை அடக்கினார்கள்.

——

### ஹௌரா ஸ்டேஷனில் வெடி.

சில வங்காளிகளும் உள்நாட்டு வாசிகளும் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் புறப்பட்டுச் செல்லுவதாக ரகஸ்யப் போலீஸாருக்குத் தகவல் கிடைக்கவே அவர்கள் பின்தொடர்ந்து சென்றனர். ஹௌரா ஸ்டேஷன் போய்ச் சேர்ந்ததும் அவர்களை விசாரித்தனர். உடனே அதில் ஒருவர் ஒரு வெடியை எறியவே அது பலமாக வெடித்தது. ஜனங்கள் நாலா பக்கங்களிலும் ஓடினார்கள். அந்தக் குழப்பத்தில் இவர்களும் தப்பியோட முயன்றனர். மூவர் கைது செய்யப்பட்டனர். நால்வர் தப்பியோடிவிட்டனர்.

### சிறையில் கலவரம்.

டோரா இஸ்மேல்கான் சிறையில் கைதிகளுக்குள் சண்டை யேற்பட்டு 6 பேர்கள் கொல்லப்பட்டு 25 பேர்கள் காயமடைந்தனர். பிறகு அதிகாரிகள் வந்து சண்டை போடும் கோஷ்டிகளைத் தனித் தனியாகப் பிரித்து வைத்துவிட்டனர்.

——

### புதிய பஞ்சாப் கவர்னர்.

இந்தியா கவர்ன்மெண்டு உள்நாட்டிலாகா காரியதரிசியாக விருந்த மிஸ்டர் எமர்ஸன் அடுத்த பஞ்சாப் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இதை ஒட்டி அவருக்கு கே. ஸி. எஸ். ஐ பட்டம் அளிக்கப்பட்டிருக்கிறது.

——

### போலீஸ் உடையில் வந்த கொள்ளைக்காரர்கள்.

15 கொள்ளைக்காரர்கள் போலீஸ்காரர்களைப் போல் உடை தரித்து முக மூடிகளுடனும் ஆயுதங்களுடனும் வங்காளத்தில் சாண்ட்பூருக்குச் சென்று 4000 ரூபாய் பணத்தையும் 2000 ரூபாய் பெறுமான நகைகளையும் அடித்துக் கொண்டு போய்விட்டனர்.

——

### ஜார்ஜ் பேர்னார்டுஷாவின் விஜயம்.

பிரபல பிரிட்டிஷ் நூலாசிரியர் மிஸ்டர் ஜார்ஜ் பெர்னார்டுஷா தேக ஆரோக்கியத்தை உத்தேசித்து உலகயாத்திரை புறப்பட்டு எம்பிரெஸ் ஆப் பிரிட்டன் என்ற கப்பலில் பய்பாய்க்கு வந்திருக்கிறார். அந்தக் கப்பல் அங்கு 8 நாள் தங்கியிருந்து பிறகு கொழும்புக்குச் செல்லும். பத்திரிகைப் பிரதிநிதி அவரைப் பேட்டிகண்டு விசாரித்ததில் வழக்கம்போல் அவர் மிகவும் ரஸமான அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். தாம் இந்தியாவைப் பார்ப்பதென்று சில தினங்கள் சுற்றுப்பிரயாணம் செய்தால் உண்மையான இந்தியாவைப் பார்க்க முடியாதென்றும் ரயில் வண்டிகளையும் மோட்டார்களையும் பார்த்துப் புழுதியில் கஷ்டப்படவேண்டியது தானென்றும், ராஜீய வேலைபாகத் தாம் வரவில்லையென்றும் மகாத்மாகாந்தி மிகவும் ரஸமான மனிதரென்றும் வியக்தமான புத்தியுடையவரென்றும் அப்படிப்பட்ட ஆச்சர்ய புருஷர் பலநூற்றாண்டுகளுக்கு ஒருவரே தோன்ற முடியுமென்றும், தீண்டாமை அனுஷ்டானத்தில் இங்கிலாந்திலுமிருப்பதாயும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இந்தியாவே மத்திய ஸ்தானமாயிருப்பதாயும் ஐரோப்பாவில் முஸோலினி ஒருவரையே பொறுப்பு வாய்ந்த மனிதராகக் கூறலாமென்றும், இந்தியாவில் அம்மாதிரி 6 முஸோலினிகள் இருந்தால் கதிமோக்ஷம் ஏற்பட்டு விடுமென்றும், ஆயுதப் பரிகாரணத்தில் தமக்கு நம்பிக்கை யில்லையென்றும் யுத்தம் எப்படியும் நேர்ந்து கொண்டிருக்குமென்றும் இங்கிலாந்தில் எல்லாம் ஒரே குழப்பமாக விருப்பதாயும் கூறினார்.

——

### வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க ஏற்பாடு.

சர்வதேசத் தொழிலாளர் ஆபீஸ் 10-ந் தேதியன்று தொழிலாளர் பிரதிநிதிகளையும் முதலாளிகளது பிரதிநிதிகளையும் கவர்ன்மெண்ட் பிரதிநிதிகளையும் கொண்டதொரு பூர்வாங்க மகாநாட்டைவேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைப்பதுபற்றி யோசிப்பதற்காகவும் வேலையில்லாத் திண்டாட்டம் வேலை நேரம் இவற்றைப்பற்றி சர்வதேசத் தொழிலாளர் சங்கம் தயாரித்துள்ள விசேஷ யாதாஸ்தைப் பற்றி யோசிப்பதற்காகவும் கூட்டியிருக்கின்றது. அது தனது யாதாஸ்தை சர்வதேசத் தொழிலாளர் ஆபீஸ் நிர்வாக சபைக்குச் சமர்ப்பிக்கும். இம்மகாநாட்டு யாதாஸ்து மே மாதத்தில் கூடும். 17-வது சர்வதேசத் தொழிலாளர் மகாநாட்டு விஷய அட்டவணையில் ஒரு இனமாகச் சேர்க்கப்படும்.

——




ஊர் ஊராகச் சுற்றி வரும் ஒரு சர்க்கஸ் கம்பெனி ஒரு சிறிய நகரத்திற்கு வந்தது. அதில் பிரதான நடிகர் ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டுத் தான் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்து அதன் முதலாளியிடம் சென்று "இங்கு வருவேலைக்கொண்டுசம்பளம எப்படிக்கொடுக்க முடியப்போகிறதோ? கட்டணம் 2 அணா, ஒரு அணாவாக வைக்கப்பட்டிருக்கிறதே" என்றார்.

உடனேஹோட்டல்காரர்:-- கட்டணத்தை மீண்டும் உயர்த்தி விட்டார்களா? எல்லாம் அந்த விஷமக்காரக் கொட்டகைக் காரனின் வேலை" என்றார்.

---

நகரகிளப்பில் சுமார் 45, 50 வயதுடைய இருவர் பேசிக் கொண்டிருந்தனர்.

ஒருவர்:—இந்தக் காலத்துப் பையன்கள் கலியாணம் செய்து கொண்டு குடும்பத்தைச் சம்ரக்ஷிக்கத் தயங்குகிறார்களே!

மற்றொருவர்:—வாஸ்தம் தான். அவர்கள் கலியாணம் என்றால் பயப்படுவதாகத் தோன்றுகிறது. எனக்குக் கலியாணத்திற்கு முன் பயம் என்றால் என்னவென்றே தெரியாது.

---

கோவிந்தன் கிறிஸ்மஸிற்குப் பட்டணத்திற்குச் சென்று விட்டுத் திரும்பித்தன் ஊருக்கு ரயிலில் சென்று கொண்டிருந்தான். இவன் இருந்த வண்டியில் இன்னொருவர் வந்து ஏறினார். அவர் தன் ஜில்லாவைச் சேர்ந்தவர் போல் தோன்றியதால் அவரை நோக்கி "நீங்கள் மாயவரமா போகிறீர்கள்?" என்று கேட்டான். அவர் 'இல்லை' யென்று பதில் கூறினார். பிறகு கோவிந்தன் கும்பகோணத்திற்கா என்று கேட்டான். அதற்கும் அவர் இல்லை யென்று பதில் கூறினார். பிறகு தஞ்சாவூருக்கா என்றதற்கும் இல்லையென்றே கூறினார். கோவிந்தன் உடனே "நீர் எந்த ஊருக்குப் போனால் எனக்கென்ன?" என்றான்.

---

சில செம்படவர்கள் ஒருநாளிரவு கடலில் மீன்பிடிக்கச் சென்றபோது அதிக மீன் கிடைத்தது. உடனே அந்தக் கோஷ்டியின் தலைவன், "இந்த இடத்தை அடையாளம் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். மறுபடியும் வருவதற்குத் தெரிய வேண்டும்" என்றான். அவனைச் சேர்ந்தவன் உடனே படகில் சாக்குக் கட்டியால் ஒரு அடையாளமிட்டான். பாதி வழி திரும்பியதும், கோஷ்டித் தலைவன் அடையாளம் போட்டவனை நோக்கி "நீ படகில் அடையாளம் போட்டு விட்டாயே? நாளைக்கு யாராவது நமது படகை இரவல் வாங்கிக்கொண்டு போனால் அந்த இடம் அவர்களுக்குத் தெரிந்து விடுமே" என்றான்.

---

அதிகப் பிரசங்கியான ஒரு வாலிபன் ஒரு தனவந்தர் வீட்டிற்கு விருந்தாளியாகச் சென்றிருந்தான். இரவு வெகு நேரங்கழித்து அவன் அங்கிருந்து அவ்வீட்டு மோட்டாரில் ரயிலுக்குப் புறப்பட்டான். வழியில் மோட்டார் ஓட்டியை நோக்கி "எனக்குக் கடைசி ரயில் கிடைக்குமல்லவா?" என்று கேட்டான்.

மோட்டார் ஓட்டி— நிச்சயமாகக் கிடைக்கும். உங்களைத் திரும்ப வீட்டிற்குக் கொண்டுவந்தால் என்னை வேலையை விட்டு நீக்கி விடுவதாக எஜமான் கூறியிருக்கிறார்.



உலகத்திற்குள் ஆச்சரியமான கடிகாரம். நியூயார்க்கு நகரத்தில் எப். டபிள்யூ. ஜென்ஸன் என்பவரிடம் இருக்கிறது. இது 600 வருஷமானது. சீனப்போர்வீரரின் கவசம் இதன் பொதுவான கூடு சீன தேவதைகளின் உருவங்கள் எண்களுக்குப் பதிலாகப் பதிக்கப்பட்டிருக்கின்றன. ஜென்ஸன் படத்தில முள்களைத் திருப்புகிறார். பி. பி. ஏ.

---

கடைக்காரன்:—இந்தக் கெடியாரம் ஒரு மனித ஆயுசு காலத்திற்கு உழைக்கும்.

வந்தவர்:—எனக்கு இப்போதே 50 வயதாகி விட்டது. அது வேண்டாம்.

---

தாயார்:—நான்கு கால்களிருந்தபோதிலும் நடக்காதது எது?

குழந்தை:—தெரியாது.

தாயார்:—நாற்காலி, மேஜை.

---

மூன்று குழந்தைகள், தங்கள் தாயார் தங்களுக்குச் சங்கராந்திக்குப் பல பரிசுகளை யளித்ததால் பதிலுக்குத் தாங்கள் என்ன வாங்கிக் கொடுக்கலாமென்று யோசித்தனர். முடிவில் தாயாரையே கேட்கத் தீர்மானிக்கப்பட்டது. பெரிய குழந்தை தாயாரைப் பின் வருமாறு கேட்டது. "சங்கராந்திக்கு நாங்கள் உனக்கு என்ன பரிசு வாங்கிக் கொடுப்பது?"

தாயார் (சிரித்துக்கொண்டே)—எனக்கு ஒன்றும் வேண்டாம். விஷமம் செய்யாமல் 3 குழந்தைகளிருந்தால் போதும்.

குழந்தைகள்:— அப்படியானால் மொத்தம் 6 பேர்களாகி விடுவோமே.

---

சங்கரன் புதிதாக வாங்கிய பனையில் தோட்டம் போட்டான். அவனுக்குச் சந்தேகமேற்படவே தோட்ட வேலையில் அனுபவமுள்ளவனான கோவிந்தனிடம் சென்று "நாம் போட்டுப் பயிராக்கும் செடிக்குக் களைக்கும் வித்தியாசம் தெரியவில்லையே! எப்படிக் கண்டுபிடிப்பது" என்று கேட்டான்.

கோவிந்தன்:— நிச்சயமாக அறிய ஒருவழி இருக்கிறது. செடியை அடியோடு பிடுங்கி விடு. அது களையாகவிருந்தால் மறுபடி முளைக்கும், இல்லாவிடில் முளைக்காது.

---

கிருஷ்ணன் கையில் ஒரு தம்படி கூடவில்லை. அவனுடைய மாமாவிடம் சென்று "உங்களை ஒரு யோசனை கேட்க விரும்புகிறேன்" என்றான்.

மாமா:—எதைப்பற்றி?

கிருஷ்ணன்:— உங்களைக் கொஞ்சம் பணம் கேட்பதென்றால் எப்படிக் கேட்பது?

மாமா (நிலைமையை யூகித்துக்கொண்டு):—டெலிபோன் மூலம் கூப்பிட்டுக் கேட்டுவிட்டுப்பதில் கூறுவதற்குள் ரிசீவரைக் கீழே வைத்து விடு.

---

நமது சிறு கதை.

# வஸ்தாத் விக்கிரமஸிங்

(நியாயவாதி எழுதியது.)

I

“கலியுக பீமஸேனன்” என்னும் பட்டப்பெயர் பெற்ற வஸ்தாத் விக்கிரமஸிங் தன்னுடன் குஸ்தி செய்ய ஆயத்தமாயிருந்த பயில்வான் பக்கிரியுடன் பொருதுவதற்காக கூடாரத்திலிருந்த தனது அறையை விட்டுக் கிளம்பும் ஸமயம். அப்பொழுது அவனிடம் ஒருவன் ஒரு கடிதத்தை அவசரமாய்க் கொண்டு வந்து கொடுத்தான். அதைப் பிரித்துப் படித்த அவன் தன்னருகிலிருந்த தனது ஏஜண்டு ஏகாம்பரத்திடம், “இதோ பார்த்தீரா? எனக்கு மற்றொரு பந்தய அழைப்புக் கடிதம்” என்று அதை அவனிடம் கொடுத்தான். அதுபின் வருமாறு:-

“வஸ்தாது விக்கிரமஸிங்குக்கு,

ஐயா,

தங்களுடன் நான் குஸ்தி செய்ய விரும்புகிறேன். நானும் தங்களைப்போல் ஒரு வஸ்தாதுதான். சில காரணங்களால் என் பெயரை இப்பொழுது வெளியிட எனக்கு விருப்பமில்லை. தங்கள் இஷ்டத்தைத் தெரிவித்தால் தங்கள் ஏஜெண்டுடன் நாம் குஸ்தி செய்யும் இடம் தேதி முதலியவற்றை நிஷ்கருஷை செய்து கொள்ளலாம். தாங்கள் குஸ்தியில் ஜயித்தால் தங்களுக்கு ஐயாயிரம் ரூபாய் பந்தயம் கொடுக்கச் சித்தமாய் இருக்கிறேன். உடனே தங்கள் பதிலை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் ‘பெயரில்லாப் பயில்வான்’.

மேற்படி கடிதத்தைப் படித்த ஏஜெண்டு ஏகாம்பரம் “இதற்குப் பதில் தாங்கள் பக்கிரியுடன் குஸ்தி செய்தபின் எழுதுகிறீர்களா?” என்று வினவ, வஸ்தாத் விக்கிரமஸிங் புன்னகையுடன் “ஏன் இப்பொழுதே எழுதுகிறேன்” என்று ஒரு காகிதத்தை எடுத்து “குஸ்தி செய்ய ஸம்மதமே, வஸ்தாது விக்கிரமஸிங்” என்று அதில் எழுதி அதைக் காத்துக்கொண்டிருந்த சேவகனிடம் கொடுத்தான். பின்பு அவன் குஸ்தி செய்யும் இடத்துக்குச் சென்றான்.

பயில்வான் பக்கிரியுடன் அவன் மற்போர் புரிவது அதுவே முதல் தடவை யானதால் அச்சண்டையைப்பார்க்கஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர். பக்கிரி யென்பவன் நாட்டில் பலவிடங்களுக்குச் சென்று அநேக வஸ்தாதுகளை வென்று பல பரிசுகளையும் பதக்கங்களையும் பெற்றவன். மலைபோன்ற தோற்றத்துடன் தோள்தட்டி நின்ற அவன் மெலிந்த ஒல்லியான சரீரத்தைக்கொண்ட வஸ்தாது விக்கிரமசிங்கை எளிதில் வீழ்த்திவிடலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான்.

அவர்களது மற்போரை வருணிக்க நமக்கு அவகாசம் இல்லை. அதை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு எவன் எவனைக் கீழே தள்ளி வெற்றிபெறுவான் என்பதை யறிய முடியாத பிரமிப்பாயிருந்தது. ஆனால் எல்லோரும் விக்கிரமஸிங் ஜயிக்க வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தனர். இளமையும் மந்தஹாஸமும் தவழ்ந்த அவன் முகம் அதைப் பார்ப்பவரது அன்பையும் அபிமானத்தையும் ஸ்வீகரிக்கும் சக்தி பெற்றிருநதது. எனவே அம்மைதானமெங்கும் அவனது பெயரை யழைத்து வெற்றி பெறும்படி கூவும் கோஷமே ஒலித்தது.

முடிவில் பக்கிரி சற்று அஜாக்கிரதையாய் குஸ்தி செய்ததால் அவன் எளிதில் விக்கிரமஸிங்கால் கீழே வீழ்த்தப்பட்டான். அதைக் கண்ணுற்ற ஜனங்கள் சந்தோஷத்துடன் “கலியுக பீமனுக்கு ஜே!” “வஸ்தாது விக்கிரமனுக்கு ஜே” என்று ஆரவாரஞ் செய்தனர்.

II

மேற் கூறப்பட்ட சம்பவங்கள் நிகழ்ந்து ஒரு வாரம் ஆயிற்று. நகரத்துக்கு முப்பது மைலுக் கப்பாலுள்ள மணிபுரம் என்னும் ஊரிலுள்ள கலாசாலைத் தலைமை ஆசிரியர் ஆனந்த ஸிங்கின் வீட்டில் கூடத்தில் ஒரு ஸோபாவில் அவர் மகள் சுலோசனை உட்கார்ந்துகொண்டு ஒரு சமாசாரப் பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்தாள். அவளுக்கு வயது பதினெட்டிருக்கலாம. அவள் விவாகமாகாத கட்டழகி. உத்தம குணத்தையும் தூய ஒழுக்கத்தையும் கைக்கொண்டவள். உயர்தரக் கல்வியில் தேர்ச்சி பெற்றவள். அவளை எவ்வளவோஉயர்தரக் குடும்பங்களைச் சேர்ந்த வாலிபர்கள் மணக்க நாடினர். ஆனால் அவர்களொருவரையும் அவள் விவாகம் செய்து கொள்ள விரும்பாததால் அவள் கன்னிகையாகவே யிருந்து வந்தாள்.

அவளது அத்தை மகன் ரஞ்சிதஸிங் அவளைப் பலவருடங்களாய்க் காதலித்து வந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்திருக்கும். சரித்திர சாஸ்திரத்தில் எம். ஏ. பட்டம் பெற்ற அவன் மணிபுரத்துக் கலாசாலையிலேயே சரித்திர ஆசிரியாக வேலை பார்த்து வந்தான். அவன் அடிக்கடி சுலோசனையிடம் சென்று தன்னை மணம் செய்து கொள்ளும்படி நிர்ப்பந்தித்தானாயினும், அவன் மீது காதல் கொள்ளாத அவள் அவனை நாயகனாக ஏற்க இசையவில்லை. ஏனெனில், அவள் உள்ளத்தை வேறொரு சுந்தரபுருஷன் கவர்ந்து விட்டான். அவன் யாரெனில் அதே கலாசாலையில் கணித ஆசிரியாயிருந்த விஜயசிங் என்பவனே. அவனுக்கும் சற்றேறக்குறைய இருபத்தைந்து பிராயந்தான் இருக்கும். அவன் பசும் பொன் நிறமேனியன். யாரையும் வசீகரிக்கும் இனிமையான முகத்தினன். நற்குண நற்செய்கைகளுக்கு இருப்பிடமானவன்.



இந்திய சர்ச்சுகளிலிருந்து பிரிட்டனுக்குத் தூது சென்றிருக்கும் மிஷனரி கோஷ்டி (இடது பக்கமிருந்து வரிசையாக) பர்மாவைச் சேர்ந்த மாநியீன்தா, வட இந்தியாவிலிருந்து ரெவரெண்டு ரல்லாராம், லாகூர் உதவி பிஷப்பு ரெவரெண்டு ஜே. எஸ். வி. பானர்ஜி, ஸ்ரீமான் ஏ. எம். வார்க்கி இவர்கள் மன்னரைப் பேட்டி கண்டனர். ஜி.எஸ்.ஏ.

சுலோசனையை விஜயசிங் பல நாட்களாய்க் காதலித்து வந்தான். ஆனால் அவள் தந்தை அவளைத் தனக்கு விவாகஞ்செய்து கொடுக்க சம்மதிக்க மாட்டாரோ வென்றுஅஞ்சிய அவன் தன் காதலை ஒருவரிடமும் வெளியிடாமல் தன் ஹிருதயத்துள் வைத்துக்கொண்டு உள்ளம் வாடினான்.

என்றாலும் அவ்விருவரும் ஒருவரை யொருவர் காதலிப்பதைக்கண்டுகொண்ட ரஞ்சிதசிங்குக் குண்டான கோபத்துக்கும் அவமானத்துக்கும் அளவே யில்லை. அத்தை மகனான தன்னைப் புறக்கணித்து விட்டு அன்னியனும் தன்னைவிட அந்தஸ்தில் யாதொரு உயர்வு மில்லாதவனுமான விஜயசிங்கை சுலோசனை காதலித்தது அவனுக்குத் தாங்கமுடியாத ஆத்திரத்தை யுண்டுபண்ணியது. பொறாமை யென்னும் தீராக்னி அவனுள்ளத்தில கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. எப்படியாவது, தனக்கு எதிரியாய் முளைத்த கணித ஆசிரியனை அவமானப் படுத்தி ஊரைவிட்டுத் துரத்த வேண்டியதென்று அவன் தீர்மானஞ் செய்து கொண்டான்.

இனி நம் கதாநாயகியாகிய சுலோசனையைக் கவனிப்போம். சமாசாரப் பத்திரிகையை ஆழ்ந்து படித்துக் கொண்டிருநத அவள் உள்ளே விஜயசிங் வருவதைக்கவனிக்கவில்லை. “என்ன பத்திரிகையில் ஸ்வாரஸ்யமான விஷயப்?” என்று அவன் கேட்ட பின்புதான் அவள் அவனிருப்பதை யறிந்தாள். உடனே அவள் “வாருங்கள். இந்த நாற்காலியில் உட்காருஙகள்” என்று கூறினாள். விஜயசிங் அவள் காட்டிய நாற்காலியில் உட்கார்ந்தான்.

சுலோசனை:--பத்திரிகையில், ஒரு பிரபலமான குஸ்திச் சண்டை அடுத்தவாரம் ஞாயிற்றுக்கிழமை சாயந்திரம் நிகழப் போகிறதாம். வஸ்தாத் விக்கிரமஸிங்கை ஒரு பெயரில்லாப் பயில்வான் எதிர்க்கப் போகிறானும். பந்தயம் ஐயாயிரம் ரூபாயாம். யார் ஜயிப்பாரோ ?

விஜயசிங்:—உனக்கு என்ன தோன்றுகிறது ?

சுலோசனை:—சந்தேகமில்லாமல் வஸ்தாத் விக்கிரமஸிங்கே வெற்றி பெறுவார்.

அப்பொழுது ரஞ்சிதசிங் அங்கே வந்து ஒரு ஸோபாவில் அமர்ந்தான்.

விஜயசிங்:—வஸ்தாத் விக்கிரமஸிங் பொருதிய குத்துச் சண்டைகளை நீ பார்த்திருக்கிறாயா?

சுலோசனை:—நான் இதுவரை ஒரு குத்துச் சண்டையையும் பார்த்ததில்லை.

அப்பொழுது மாடியில் இருந்த தலைமை யாசிரியர் ஆன

(1582ம் பக்கம் பார்க்க )

# தென்னிந்தியப் பிரமுகர்கள்

## பனகல் ராஜா

(1866—1928)

கே. எஸ். ஆர்.

ராஜா சர் பனகண்டி ராமாராயனிங்கார் (பனகல் ராஜா) வெகு காலமாகவே தென்னாட்டுத் தெலுங்க தேசத்திற் புகுந்த ஓர் க்ஷத்திரியர் குலத்தில் காளஹஸ்தி ராஜாக்களின் வம்சத்தில் 1866-ம் வருஷத்தில் ஜனித்தார். இவர் பிறவியிலிருந்தே பூஸ்திதியுடைய தனவந்தராக விருந்தார்.

ராமாராயனிங்கார் இளமைப் பருவத்திலிருந்தே தெலுங்குப் பாஷையையும் ஸம்ஸ்கிருத பாஷையையும் அப்யஸிக்கத் தொடங்கினார். இவருக்கு இவ்விரண்டு பாஷைகளிலும் இருந்த ஆசையும் ஊக்கமும் பற்றியே இவர் வெகு சீக்கிரத்தில் அவைகளில் மிகுந்த பாண்டியத்தை யடைந்தார். இவர் வெகு சுலபமாகவே எய்தின இந்த பாஷாபாண்டித்தியம் இவருடைய பிற்காலத்தில் அநேகம் சந்தர்ப்பங்களில் வெளிப்படையாயிற்று. இவர் வெகு நாட்கள் ஒரு பள்ளிக்கூடத்திலும் சேராமல் வீட்டிலிருந்தே வித்தியாப்பியாசம்செய்து வந்தார் இந்தக் காலத்தில் இவருடன் விளையாடும் இவருக்குச் சமவயதினரான சிறுவர்கள் ஆங்கிலத்தில் பயின்று வந்தது இவருடைய மனதிலும் ஆங்கிலம கற்க வேண்டுமென்ற உத்சாகத்தை அதிகமாகக் கிளப்பியது. ஆகவே இவர் சில மாதங்கள் தனிமையாக ஒரு உபாத்தியாயரை வைத்துக் கொண்டு இங்கிலீஷ் பாஷையில் கொஞ்சம் தேர்ச்சி யடையவாரம்பித்தார். இதன் பிறகு இவர் திருவல்லிக்கேணி ஹிந்து ஹைஸ்கூலில் 1882-ல் சேர்ந்தார். நான்கு வருஷங்களுக்குப் பின்னர் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையிற் தேறி, இவர் சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் சேர்ந்தனர். 1892-ல் இவர் அங்கு "போர்டில்லான் பரிசு" தெலுங்கு பாஷைக்காகப் பெற்றார். 1893-ல் இவர் "பீ. ஏ." பட்டம் பெற்றார். இவர் தத்துவ சாஸ்திரத்திலும் திராவிட பாஷைகளிலும் சமர்த்தராகி, 1899-ல் "எம், ஏ." பட்டத்தையும் வாங்கிக் கொண்டனர். ஆனால் இவர் இதற்கிடையில் சும்மாவிருக்காமல் சென்னை லாகாலேஜில் சேர்ந்து 'பி. எல்.' பட்டத்தையுமடைந்தார்.

முதலிருந்தே தேசசேவை செய்வதை தம் தொழிலாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற பேரவா இவரது மனதில் குடி கொண்டிருந்தது. ஆகையால் இவர் பொது ஜனங்களுக்காக உழைக்கவேண்டுமென்று வெளி வந்தார். உடனே இவர் வட ஆற்காடு ஜில்லா போர்டு மெம்பராக நின்று தேர்ந்தெடுக்கப்பட்டார். பொது ஜன நல விஷயமாக இவருக்கு முதன் முதல் இந்த ஜில்லா போர்டில்தான் பழக்க மேற்பட்டது. இவருக்கு சமா



பனகல் ராஜா.

சாரங்களை சரிவர அறிய விருந்த விருப்பம் இங்கு அதிகரித்தது. இவர் எல்லாவற்றையும் நன்கு கிரஹித்து, எல்லோராலும் மெச்சப்பட்ட தனது அபிப்பிராயங்களை சதா தெரிவித்து வந்தார். இவ்வாறு நம் நாட்டு முன்னேற்ற விஷயங்களில் இவருக்குண்டான ஆசை மிகுதியாகவே, இவர் வடஆற்காடு ஜில்லா போர்டு மெம்பர் பதவியை சில காலங் கழித்து விட்டு விட்டு, சட்டசபைக்குள் புகுந்துத் தம் திறமையை வெளிக்காட்டத் தீர்மானித்தார். இதுபற்றியே இவர் 1912-ம் வருஷத்தில் இந்தியா சட்டசபை (இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில்) அங்கத்தினராக நம் தென்னிந்திய ஜமீன்தார்களாலும் மிராசுதாரர்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்டு, மூன்று வருஷங்கள் இருந்தார். இவரது வாதாடுந்திறமையும், நுண்ணறிவும் அங்கு மிகவும் போற்றப்பட்டன. இந்திய ராஜப்பிரதிநிதியாகவிருந்த ஹார்டிஞ்சு பிரபு சில தடவை இவரது செய்கைகளைத் தனியாகப் புகழ்ந்திருக்கின்றார். 1915-ம் வருஷத்தில் மூன்றாவது ஆந்திர மகாநாட்டு அக்கிராஸனாதிபதியாக, இவர் செய்த அரிய பிரசங்கத்தில் நம் தேசத்தினர்க்கு, தேசாபிமானத்தைப்பற்றியும் அவரவர் கடமைகளைப்பற்றியும், மிகவும் யோசனை செய்து, நற்புத்தி புகட்டியிருக்கிறார்.

1918-ல் இவருக்கு அரசாங்கத்தார் "திவான் பகதூர்" என்ற பட்டத்தையளித்தனர்.

இதன் மத்தியில் டாக்டர் நாயரும், ஸர் தியாகராய செட்டியாரும், ஜஸ்டிஸ் கட்சி என்கிற பிராமணரல்லாதார் இயக்கத்தையாரம்பித்தனர். இவர்கள இவ்வியக்கத்தை ஆரம்பித்ததற்குக் காரணம் யாதெனில், பிராம்மணர்களால் அனுபவிக்கப்பட்டு வரும் அநேக சர்க்கார் உத்தியோகங்களையும் மற்றும் இதர உத்தியோகங்களையும் பிராம்மணரல்லாதார்க்கு வாங்கிக்கொடுத்து, அவர்களுடைய ஸ்திதியை உயர்த்த வேண்டுமென்பதே. இதுவுமன்றி பிராம்மணரல்லாதார்களுக்கு வித்தியாதானமும் செய்து, அவர்களை உயர்ந்த ஸ்திதிகளுக்கு அருகர்களாக்க வேண்டுமென்ற எண்ணமும் இப்பெரும் இயக்கத்தைத் தொடங்கியவர்களின் மனதில் இருந்தது. திவான்பஹதூர் ராமராயனிங்காரும் இந்தக் கக்ஷியில் சேர்ந்து இதை முன்னுக்குக் கொண்டுவர மிகவும் உழைத்தார். இவர் செய்து வரும் காரியங்களை மிகவும் மெச்சின அரசாங்கத்தார் இவரைப் பிராம்மணரல்லாதார்களுக்காக, பார்லிமெண்டரி கமிட்டி முன்பு, இந்தியச் சீர்திருத்தங்களைப்பற்றித் தென்னிந்திய ஜமீன்தார்கள் மிராசுதார்கள் இவர்கள் பிரதிநிதிகளுள் ஒருவராக, சாக்ஷியம் சொல்ல இங்கிலாந்திற்கனுப்பினர். 1918-ல் இவர் அரசாங்கயுத்த சபைக்கும் அழைக்கப்பட்டுச் சென்றார்.

சாதாரண ஜனங்களுக்காக ஸ்தாபிக்கப்பட்ட ஜஸ்டிஸ் கக்ஷியில் இவர் சேரவே, இவருடைய தூண்டுதலால், தனவந்தர்களான ஜமீன்தார்களும் அக்கக்ஷியில் சேர்ந்து, அதன் பலத்தை யதிகப்படுத்தினார்கள். இவர் இந்தக் கக்ஷியின் முக்கிய அங்கத்தின,

ராகவிருந்து, ஸர் தியாகராய செட்டியாரின் மாணத்திற்குப் பின்பு இதன் தலைவராகவும் தனது அந்திய காலம் வரையிலிருந்து இதன் அபிவிருத்திக்காக மிகச் சிரமப்பட்டார். இவர் 1919-ம்வருஷத்திலும் இந்தியா சட்டசபைமெம்பராக விருந்தார். ஜஸ்டிஸ்கக்ஷி இவர்கீழ் அதிக முன்னுக்கு வந்தது. இவர் இருக்கும் பரியந்தம் அக்கக்ஷியில் சண்டையில்லாமல் ஒற்றுமை இருந்து வந்தது. இதற்கு இவருடைய குணங்களும், கம்பீரமானத் தோற்றமும், சுலபமாக எல்லோரையும் தம் வழிக்குத் திருப்பும் சக்தியும், எக்காலத்திலும் குன்ருத இவரது சாமர்த்தியமும், காரணங்களாகும். ஜனங்களின் தலைமை ஸ்தானத்தை வகிப்பது எல்லோருக்கும் கிட்டாது. இந்தப் பதவி இவருக்கு எட்டியது, இவரது அரிய குணங்களின் மஹிமையை எல்லோருக்கும் பிரத்தியக்ஷமாக்க வல்லது.

இவர் 1920-ல் புதிதாகச்சீர் திருத்தப்பட்ட சென்னை சட்ட சபை அங்கத்தினர்களுள் ஒருவராக, வடக்கு மத்திய மிராசுதார்கள் வகுப்பால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இந்த சட்ட சபையில் இவருடைய ஜஸ்டிஸ் கக்ஷிக்குப் பலம் அதிகமாக இருந்ததால் இவரும் இன்னுமிருவர்களும், கவர்னர் பிரபுவால் 1920-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் மந்திரிகளாக்கப் பட்டனர். 1921-ம் வருஷாரம்பத்தில் இவரை முதல் மந்திரியாக கவர்னர் நியமித்தனர். இவர் மூன்று வருஷகாலம், மாகாண சுயஆட்சி, வைத்தியம், சுகாதாரம், ஹிந்துமத தர்மஸ்தாபனங்கள் முதலிய இலாகாக்களைத் தமது ஆதீனத்தில் வைத்துக் கொண்டு பிரதம மந்திரியாக விருந்தார். இவர் இக்காலத்தில் செய்த கார்யங்களைப் பாராட்டித் துரைத்தனத்தார் இவருக்கும் இவருடைய சந்ததிக்கும் வழங்குவதற்காக "ராஜா" என்ற கௌரவப் பட்டத்தை இவருக்கு 1923-ல் அளித்தனர். இவர் இது முதற்கொண்டு "பனகல் ராஜா" என்ற பெயரைத் கொண்டார். 1923-ம் வருஷ சட்ட சபைத்தேர்தல்களிலும் இவர் சென்னை சட்ட சபைக்கனுப்பப்பட்டார். இரண்டாம் விசையும் இவரது கக்ஷிக்குப் பலம் அதிகமாக விருந்ததால், இவர் மறுபடியும் முதன் மந்திரியானர். திரும்பவும் மூன்று வருஷ காலம் இந்த ஸ்தானத்தில் இருந்தார். மூன்ருவது தடவை சட்ட சபை தேர்தலில் இவரது கக்ஷி மிகுந்த தோல்வியுற்றது. ஆகையால் மந்திரி பதவி வாய்க்காத இவர் கவர்ன்மெண்டு எதிர் கோஷ்டியில் தமது கக்ஷியுடனிருந்து, அரசியல் விஷயங்களில் தமக்கிருந்த சாமர்த்தியத்தையும் புத்தி நுட்பத்தையும் வெளிக்காட்டி வந்தார். அமராவதியில் 1925-ல் நடந்த பிராமணரல்லாதார் மஹாநாட்டிலும் இவர் தலைமை வகித்தார்.

பனகல் ராஜா மொத்தம் ஆறு வருஷ காலம் சென்னை ராஜதானி பிரதம மந்திரியாக இருந்தார். இவர் இந்தக் காலத்தில் அரசாங்கத்திற்கு மிகவும் உபயோகமாக விருந்து, அதைத் திறமையுடன் பரிபாலித்து வந்தார். இவர் நம் புராதன ஆயுர்வேத முறைகளை நமது நாட்டினர் கற்றறிய வேண்டுமென்று —ஸ்கூல் அப் இந்தியன் மெடிஸின்— என்கிற இந்திய வைத்தியப் பள்ளிக்கூடத்தை யேற்படுத்தினர். வெகு காலமாகவே சிலரால் ஆமோதிக்கப்படாமல் இருந்து வந்த ஹிந்து மததர்ம ஸ்தாபன மசோதாவைச் சட்ட சபையில் கொண்டுவந்து, அதை எதிர்த்த சிலருடன் சரிவா வாதாடி, சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தார். நம்ஹிந்துக்கோவில்களிலுள்ள தர்ம கைங்கர்யங்களை இஷ்டப்படி வீணுக்காமல், நம் நாட்டினரின் நன்மைக்காக உபயோகப்படுத்த வேண்டுமென்று இந்தச் சட்டத்திற்காக மிகவும் பாடுபட்டார். இவர் இந்த மசோதாவைக் கொண்டு வருகையில் எதிரிகளுக்குப் பதில்சொல்லி இதைச் சட்ட மாக்கியது, இவரது தைரியத்தையும், வெகு லகுவாகவே கிரஹிக்கும் இவரது புத்தி சாதுர்யத்தையும், நம் மதநூல்களில் இவருக்கிருந்த நிபுணத்வத்தையும், இவரது சாஸ்திர ஞானத்தையும், நன்கு விளங்கச்செய்யும். இவர் மந்திரியாக விருக்கையில் தம்வசமிருந்த இலாகாக்களில் ஜாதி பேதத்தைப் பாராட்டியதில்லை என்று இவர் சொல்லியிருக்கிருர். இவருக்கு மன்னர் 1926-ல் "ஸர்" (கே. ஸீ. எஸ். ஐ.) என்ற விருதை யளித்தனர்.

இவர் சென்னை சர்வகலாசாலை செனேட் சபை அங்கத்தினராகவும் இருந்தார். சர்வகலாசாலையைப்பற்றின அநேக சிறு சங்கங்களிலும் இவர் இருந்தார். இவருக்குக் கல்வி விஷயத்தில் மிகுந்த பற்றிருந்ததனுல் சென்னை சர்வகலாசாலைக்குத் திரவியங் கொடுத்து அநேகம் ஸ்தாபனங்கள் செய்தார். இவைகளில் ஒன்று தெலுங்கு பாஷையில் ஆராய்ச்சி விஷயங்களைப் பிரசுரம் செய்வதற்குதவிபுரிய ஏற்படுத்தப்பட்டது. ஒரு சமயம் சட்டசபையில் இவரும் ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அய்யரும் அரைமணி நேரகாலம் சம்ஸ்கிருதத்தில் தர்க்கஞ் செய்தது, இவருக்கு வடமொழியில் இருந்த ஞானத்தை எடுத்துரைக்கும் ஓர் உதாரணமாகும். ஜனங்களின் முன்னேற்றம், ஒத்துழைத்தல், முதலிய விஷயங்களில் இவர் மிகவும் ஆர்வத்துடன் இருந்தார். இவருக்கு இவைகளைப்பற்றின உயர்ந்த அபிப்பிராயங்கள் இருந்தன. இவர் வாய்ப்பேச்சுகளுடன் மட்டுமில்லாமல், தாம் எண்ணியவற்றை நடத்தியும் வந்தார். இவர் தாழ்ந்தோரை உயர்த்த வேண்டுமென்று, காளஹஸ்தியில் ஒரு பள்ளிக்கூடத்தையும், ஒரு ஏழைகள் வசதியையும் ஸ்தாபித்தார். இவர் கைத்தொழிலாளர்களுக்காகவும், விவசாயிகளுக்காகவும் இனமாகவே ஒரு பள்ளிக்கூடத்தையும் அவர்கள் வசிப்பதற்கொரு இருப்பிடத்தையும் ஏற்படுத்தினர்.

இவ்வாறு பெருங்கீர்த்தி வாய்ந்த பனகல் ராஜா ஸர் ராமராயனிங்கார், 1928-ம் ஆண்டு டிசம்பர்மாதம் 16-ம் தேதியன்று, சென்னையில் தனது 62-வது பிராயத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தனர். இவரது மாணம் இவருடைய கக்ஷியினர்க்கு எல்லோரையும் விட மிகுந்த துக்கத்தை விளைவித்தது. இப்பேர்க்கொத்தவர்களுக்குப் பின்னர் இவர்கள் ஸ்தானத்தை சரிவா வகிப்போர்கள் அகப்படுவது துர்லபமன்றோ! பிறருதவியின்றி நம் முயற்சிகளால நாம் முன்னுக்கு வாலாம் என்பதை இவருடைய ஜீவிய சரித்திரம் எல்லோருக்கும் உணர்த்தும்.



# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.ஏ.பி.எல். எழுதியது.]

ஒரு போர்வையைப் போர்த்திக்கொண்டு, அங்கு மெல்ல நான் அவருடன் நடந்துபோக, வீதியிற் புறப்பட்டவுடன் யாரோ இரண்டு யாழ்ப்பாணத்து வாசிகள் எங்களைப் பின் தொடர்ந்தனர்; இதை யாரோ வீதியிற் போகிறவர்கள், என்று நாங்கள் அவ்வளவாகக் கவனிக்கவில்லை; பிறகு சபை தங்கியிருந்த வீட்டிற்குள் நாங்கள் நுழைந்தபொழுது, அவர்களும் எங்களுடன் நுழையவே, இவர்கள் யாரென்று திரும்பிப்பார்க்க, அவர்களுள் ஒருவன் மெல்ல எங்கள் அருகில் வந்து, 'ஐயா எங்களை மன்னிக்க வேண்டும், உங்களை ஒரு கேள்விகேட்கலாமோ?' என்று நயத்துடன் கேட்க, "சுகமாய்க் கேட்கலாம்" என்று நாங்கள் பதில் உரைத்தோம். அதன்மீது அவன் "நீங்கள் சுகுணவிலாச சபையைச் சார்ந்தவர்கள் தானே? நேற்றைத்தினம் இரவு நாடகத்தில், இதோ என்னுடன் வந்த எனது நண்பர், 'சம்பந்த முதலியார் ஆடவில்லை யென்கிறார்; நான் ஆடினார்,' என்று சொல்கிறேன்; எங்களில் யார் கூறுவது சரி யென்று நீங்கள் தீர்மானிக்க வேண்டும்" என்றான். அதன் மீது நான், "நீங்கள் கூறினது தான் சரி" என்று சொல்ல, அம்மனிதன் போகுமுன் இரண்டு மூன்று முறை என்னை உற்றுஉற்றுப் பார்த்துவிட்டுப் போகப் புறப்பட, எனது நண்பர் சி. ரங்கவடிவேலு நகைத்து விட்டார். அதன் பேரில், "நான்தான்சம்பந்தம்" என்று சொன்னேன். அதற்கு அம்மனிதன் "மிகவும் சந்தோஷம்; நானும் அப்படித்தான் சந்தேகித்தேன்; ஆயினும், எப்படி நேராகக் கேட்பது என்று சங்கோசப்பட்டேன். மன்னிக்கவேண்டும்" என்று சொல்லி விடைபெற்றுப்போனான்.

மறுநாள், "சாரங்கதா நாடகம்" வைத்துக் கொண்டோம். 'சித்ராங்கி'யாக நடிப்பதில் மிகவும் பிரசித்திபெற்றிருந்த என்துயிர் நண்பர் ரங்கவடிவேலு, வந்திருந்தவர்களின் மனதையெல்லாம் கவர்ந்தனர் என்று நான் இங்கு எழுத வேண்டியதில்லை. நாடகமேடைக்கு கோணியை எடுத்து விட்டு ஒரு ஜமக்காளம் போட்டார்கள். வெளிச்சங்களும் முதல் நாளிருந்ததைவிட நன்றாக அமைக்கப்பட்டன. கொட்டகையில் இடமில்லாதபடி நிறைந்திருந்த ஜனங்கள் ஆதி முதல அந்தம் வரையில் நாடகத்தைப் பார்த்துச் சந்தோஷித்தனர் என்று சொல்வது அதிகமாகாது. சித்ராங்கியின் பாத்திரத்திற்குப் பிறகு, சுந்தரகன் மதுரகவி வேடங்கள் சபையோரை மிகவும் சந்தோஷிக்கச் செய்தன. நானும், முதல் நாடகத்தில் நமக்குள்ள கொஞ்சம் திறமையைக் காட்ட முடியாமற்போயிற்றே என்று இந்நாடகத்திலாவது சுத்தமான தமிழ் பாஷைகு ஓர் அடைக்கலஸ்தானமாக நிற்கும் யாழ்ப்பாணத்தில், அதைக் காட்ட வேண்டுமென்று விரும்பினவனாய், நன்றாய் நடிக்க முயன்றேன். ஆயினும், புறவிடுகிற காட்சியில், முற்றிலும் நின்றுகொண்டே பேச வேண்டியவன், பலஹீனத்தினால் நிற்க முடியாமல், ஒரு நாற்காலியை மேடை மீது போடச்சொல்லி, அதில் உட்கார்ந்துகொண்டே பேச வேண்டியதாயிற்று. அப்பொழுது இப்படி நேர்ந்ததே என்று நான் என் மனதிற்குள் பட்ட வருத்தம் கொஞ்சம் அல்ல. இதை வாசிக்கும் எனது நண்பர்களாகிய ஆக்டர்கள், நாடகமேடையில் தாங்கள் நடிக்க வேண்டும் என்னும் எண்ணம் தங்களை விட்டு அகலும் வரையில் முக்கியமாகத் தங்கள் தேகத்தை நோய்நொடி வாராதபடிக் காப்பாற்றிக் கொள்வார்களாக. ஒருவன் எவ்வளவுதான் கெட்டிக்காரனான ஆக்டராயிருந்த போதிலும், உடம்பு அசௌக்கியமாயிருந்தால் அவனால் என்ன செய்யக்கூடும்?

உடனே மறுநாள், ராத்திரி நாடகம் வைத்துக் கொள்ள முடியாதென்று சொல்லி, சாயங்காலம் $5\frac{1}{2}$ மணிக்கு ஆரம்பித்து $8\frac{1}{2}$ மணிக்குள்ளாக முடிக்கத்தக்க சிறு நாடகமாகிய "நற்குல தெய்வம்" என்பதை வைத்துக்கொண்டோம். இது ஒரு சிறு நாடகமாகையாலும், இதில் எனக்கு அதிக பாகமில்லாதபடியாலும், அதிகக்கஷ்டமில்லாமல் இதில் ஆடி முடித்தேன். நாடகம் ஆனதும், எங்கள் சபை மங்களம் பாடுமுன் ரங்கத்தின் முன் வந்து நான், யாழ்ப்பாணத்து வாசிகள் எங்கள் சபைக்குச் செய்த எல்லா உதவிக்காக எங்கள் சபையின் வந்தனத்தைச் செலுத்தி விட்டு, வீடு போய்ச் சேர்ந்து, யாழ்ப்பாணத்தில் அடியெடுத்து வைத்த போது நாம் இங்கு ஒரு நாடகமாவது ஆடப்போகிறோமா என்று திகிலடைந்த நான், மூன்று நாடகங்களை யாழ்ப்பாணர்கள் மனமகிழ முடிக்கச்செய்த ஈசன் பேருளைப் போற்றிவிட்டு உறங்கினேன்.

மறுநாள் காலை, நாடகமாடிய இளைப்பினால் அயர்ந்து நித்திரை செய்து, கொஞ்சம் நேரம் பொறுத்துக் கண் விழித்த நான், என் படுக்கையைச் சுற்றி, யாழ்ப்பாணத்து பெரிய மனிதர்கள் நான்கைந்து பெயரும், வி. வி ஸ்ரீனிவாச ஐயங்கார், ரங்கவடிவேலு முதலிய சபையின் நிர்வாக சபை அங்கத்தினரும் உட்கார்ந்திருக்கக் கண்டேன். நான் அதிகமாகத் தூங்கினதற்கு அவர்கள் மன்னிப்பைக் கேட்டு விட்டு, 'என்ன விசேஷம்?' என்று நான் அவர்களை வினவ, யாழ்ப்பாண வாசிகளில் ஒருவர் (அவர் முத்துக்குமரு முதலியார் என்று நினைக்கிறேன்) "நாங்கள் எல்லாம் உங்களுக்குக் கொஞ்சம் கஷ்டம் கொடுக்க வந்திருக்கிறோம். யாழ்ப்பாணத்துக் கலாசாலைக்காகவும் யாழ்ப்பாணத்துத் தேகப் பயிற்சி சபைக்காகவும், சுகுண விலாச சபை ஒரு நாடகம் போட்டு அதன் வரும்படியை உதவவேண்டுமென்று உங்கள் சபையாரைக் காலை கேட்டோம். அவர்களெல்லாம் நீங்கள் சம்மதித்தால் வேறு ஆட்சேபணையில்லையென்று சொல்லுகிறார்கள். ஆகவே, உங்களால்தானிருக்கிறது. நீங்கள் ஆம் என்றால் நிறைவேறிவிடும் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார். அதன்பேரில், 'இதென்னடா இது; கஷ்டமெல்லாம் தீர்ந்தது என்றிருந்தோமே, இது ஒன்று இப்பொழுது வந்து முளைத்ததே!' என்று எண்ணினவனாய் என்றைக்கு நாடகம் போடுகிறது என்று கேட்க, இன்று சாயங்காலம் என்று பதில் உரைத்தார்கள். அப்பொழுது ஏறக்குறைய எட்டரை அல்லது ஒன்பதுமணியிருக்கும். இன்றிரவு நாடகம் வைத்துக் கொண்டால், சாயங்காலத்திற்குள்ளாக எப்படி நாடக விளம்பரம் முதலிய வெளியாவது, ஜனங்களுக்கெல்லாம் எப்படித் தெரிவது? என்று ஆக்ஷேபித்துப் பார்த்தேன். (வாஸ்தவத்தில் என் தேகஸ்திதியைக் கருதினவனாய், எப்படியாவது இதினின்றும் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்பதே என் கருத்தாயிருந்தது.) அதற்கு அவர்கள் "அந்தச் சமாசாரங்களைப் பற்றி உங்களுக்குக் கவலை யேன்? அதையெல்லாம் நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம். அது எங்கள் பொறுப்பு. அவற்றைப்பற்றி உங்களுக்குக் கவலைவேண்டாம். நாடகமாடுவதாக நீங்கள் சம்மதியுங்கள்!" என்று வற்புறுத்தினார்கள். அதன்பேரில் இவ்வளவு பலவந்திக்கிறார்களே நமது நண்பர்கள் என்று சற்று இணங்கினவனாய், என்ன நாடகம் போடுவது என்று கேட்டேன். அதன்பேரில் "லீலாவதி—சுலோசனா உங்கள் சபை நாடகங்களில் ஒருமிகச் சிறந்தது என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அதில் உங்களுக்கு அதிகச் சிரமமில்லையென்று கேள்விப்படுகிறோம்-மனோஹரன் நாடகத்தைப்போல்—ஆகவே, அதைப் போடச் சம்மதிக்க வேண்டும், உங்கள் சபையின் மற்ற ஆக்டர்களெல்லாம் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நீங்கள் ஒருவர் தான் பாக்கி. நீங்கள் சம்மதித்தால் உடனே ஏற்பாடு செய்து விடுகிறோம்" என்று சொன்னார்கள்.

(தொடரும்)

## ஸங்கீதம்.

[காபிரைட்.]

(ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. எ. எழுதியது.)

பல்லவி

எவரிதோ நே தெல்புது? ராம!
நாலோனி ஜாலினி

அனுபல்லவி

கவகொனி ஸதா பஜனஸேய,
கார்யமு லன்னி வேருயே

சரணம்

கண நாது ஸேய கோரக,
கடுவானருண்டை தீரேகா ?
குணமயாமயாம் புதஸமீர !
கோபால ! த்யாகராஜநுத !

II

ராம! நாலோனி ஜாலினி —ராம! என் மனஸிலுள்ள துக்கத்தை
எவரிதோ நே தெல்புது? —யாருடன் சொல்வேன்?
கவகொனி ஸதா பஜனஸேய —ஒன்று கூடி எப்பொழுதும் பஜனை செய்ய
கார்யமுலு அன்னி வேறு ஆயே —கார்யம் யாவும் வேருயிற்று.
கண நாதுஸேய கோரக —பிள்ளையாரைப் பிடிக்க வேண்டினல்
கடு வானருண்டை தீரேகா? —பயங்கரமான குரங்காய் முடிந்ததல்லவா?
குணமய ஆமய அம்புத ஸமீர! —ஸத்வ ரஜஸ் தமஸென்ற குணங்களான நோய்கள் நீருண்ட மேகங்களைப் போல் அடர்ந்திருக்க, அவைகளைச் சிதறவடிக்கும் சண்டமாருதமே!
கோபால ! த்யாகராஜநுத ! —கோபால! த்யாகராஜநுத!

III

இது கிருஷ்ணனைப் பற்றின சில கீர்த்தனங்களில் ஒன்று. கடதோராத, வேணுகான லோலுனி, ப்ராணநாத, முதலியவை இவ்விதமே.

ஜாலி:—தான் ராமனை மனப்பூர்வமாக உபாஸித்து அவருடைய கிருபைக்குப் பாத்ரமாகவேண்டுமென்று எண்ணங் கொண்டார். ஆனல் அவர் விரும்பின பயன் கிடைக்கவில்லை. "அந்தக் கஷ்டத்தையும் மனத்தளர்ச்சியையும் யாருடன் சொல்வேன்? என்னைப் போன்ற நிலைமையில் இருப்பவர்களுக்கல்லவா என் துயரம் தெரியும்? அவ்விதமான :பாக்யஹீனர்கள் எவருமில்லையென்பது நிச்சயம்."

கவகோனி:—"என்னைப் போன்ற ஸாதுக்களும் பக்தர்களும் ஒன்று சேர்ந்து ராமனைப் போற்றி அவருடைய குண கணங்களைப் பாட ஆரம்பித்தால், மனது அங்கே நில்லாமல் கண்ட கண்ட விடங்களில் அலைந்து திரிகிறது. 'பிள்ளையாரைப் பிடிக்க குரங்காயிற்றென்ற' பழமொழி எனக்கே பலித்தது. த்ரிகுணங்களென்ற கொடிய வ்யாதி, நீருண்ட மேகங்களைப்போல் கறுத்து அடர்ந்து பரவியிருக்கிறது. அதைப் போக்க உன் கருணைக்கே திறமுண்டு. சண்டமாருதத்தைப் போல் அந்த மேகக் கூட்டங்களை நீயே சிதறவடிக்கவேண்டுமெ"ன்கிருர். இதே கருத்தை நாச்சியாரும் திருப்பாவையில் "உனக்கே நாம் ஆட்செய்வோ"மென்று, "அந்த நிச்சயத்தை மாற்றும் வேறு காரணங்கள் அக்ஞானத்தாலும் பூர்வ கர்மத்தாலும் ஏற்படலாம். வேறு கோரிக்கைகள் தோன்றலாம். ஆனலும் அவைகளையொழித்து மாற்றி உன் திருவடிகளில் கைங்கர்யம் செய்வதிலேயே என் மனம் நாடியிருக்கும்படிச் செய்ய வேண்டியவனும் நீயே" யென்று "மற்று நம் காமங்கள்மாற்று" என்று முடிப்பதை இங்கே கவனிக்கவும்.

இந்தக் கீர்த்தனத்தால் ஸ்வாமிகளுக்கு ராமகிருஷ்ணுதி அவதாரங்களில் பேதபுத்தி கிடையாதென்று நன்கு விளங்குகிறது.

கௌரீமனோஹரீ ஆதி

பல்லவி

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| எ | வ | ரி | தோ | நே | தெல் | பு | து | ரா | ம |
| க | ரி | க | மாக | கா | நீ | நீ | ரி | ஸா நீ | ரிஸநிஸ |

அனுபல்லவி

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | வ | சொ | னி | ஸ | தா | ப | ஜ | ன | ஸே | ய | |
| ப | ப | த | நீ | நி | ஸா | ரி | ரி | கா | நீரி | நீரி | |
| கார் | | ய | மு | | லன் | னி | | | வே | ரு | யே |
| ஸா | | ஸநிதா | த | | பதநீ | ஸநிதா | | | பாம | ஸா | நீ |

சரணம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| க | ண | நா | து | ஸே | ய | கோ | ர | கா |
| ப | ப | பா | ப | மபதா | நீதபா | பாம | கா | நீ |
| க | டு | வா | ன | ருண் | டை | தி | ரே | கா |
| ரிக | மக | கா | ரி | ரிஸநிஸா | ரிக | மபா | ம | பா |

இதற்கு மேல் அனுபல்லவியைப் போன்றது.

1. இது 23-வது மேளராகம். முதலாவது சக்ரம் 5-வது மேளராகமான வதியில் இந்தக் கீர்த்தனம் செய்யப்பட்டதென்று அச்சிட்ட பதிப்புகளில் காணப்படுகிறது. அதை அனுஸரித்தே சிலர் பாடுகிருர்கள். ஆனல், இது சுத்த ரிஷப சுத்த காந்தாரங்களைச் சேர்த்துப்பாடுவது கஷ்டமாகையால், கோகிலப்ரியைக்கு மாற்றப்பட்டது; சுத்த ரிஷப ஸாதாரண காந்தாரங்களைச் சேர்த்துப் பாடுவது ஸுலபம்; தோடி நமக்குப் பழக்கமல்லவா ? ஆனல் கோகில ப்ரியையும் அவ்வளவு பழக்கத்திலில்லை; ஸ்வாமிகள் அதில் 'தாசரதே' யென்ற ஒரே கீர்த்தனத்தைச் செய்திருக்கிருர். ஆனதால், 3-வது சக்ரத்தில் 17-வது மேளத்திற்கு மாற்றப் போனல், ஸூர்யகாந்தமும் அவ்வளவு பழகின ராகமல்ல; அதில் ஸ்வாமிகள் ஒரே கீர்த்தனத்தைச் செய்திருக்கிருர்; ஆகையால் 4-வது சக்ரம் 24-வது கௌரீமனோஹரீயில் மாற்றப்பட்டது. ஏன் 28-வதான சங்கராபரணத்திற்கு மாற்றக்கூடாது? சுத்த காந்தாரத்தை ஸாதாரணமாக மாற்றலாம்; அந்தரமாகச் செய்வது பிசகு. இது சிலருடைய கொள்கை. என் மதம் வேறு. அதை முன்பே வெளியிட்டிருக்கிறேன்.

# விவசாயப்பகுதி

## மக்காச் சோளம்



(ஸ்ரீமான் பி எஸ். பார்த்தசாரதி அய்யங்கார், பி.எ., பி.எல். எழுதியது.)

மக்காச் சோளத்தை எல்லா தென் இந்திய பாஷைகளிலும் மக்கா ஜொன்னலு, மக்கா ஜோள என்று ஓர் வகையான சோளமாய்க் கருதி பெயரிட்டிருக்கின்றனர். இதை இங்கிலீஷில் மெயிஜ் என்றும் இந்டியன் கார்ன் என்றும் சொல்வார்கள். அமெரிக்காவில் இதை 'கார்ன்' என்றால் 'தானியம்' என்று சொல்வார்கள்.

மக்காச் சோளம் ஆசியா கண்டத்திலும் அமெரிக்காவிலும் அனேக ஆயிரம் வருஷங்களாய்ப் பயிரிடப்பட்டு வருகிறது. ஆனால் இப்போது இதை அமெரிக்காவில் தான் ஏராளமாய்ப் பயிர் செய்கின்றனர். அமெரிக்க ஐக்கிய மாகாணங்களில் மட்டும் வருஷம் ஒன்றுக்கு சுமார் பத்து கோடி ஏகராவில் இதைப் பயிரிடுகின்றனர். நாம் எப்படி அரிசியையும் ஐரோப்பா கண்டத்தினர் எவ்வகையாய் கோதுமையையும் தினந்தோறும் முக்கிய உணவாய் உண்கிறோமோ, அவ்வகையாய் அமெரிக்காவில் எல்லோரும் மக்காச் சோளத்தை தினந்தோறும் உண்கின்றனர்.

இது கொஞ்சமட்டும் உஷ்ணப்பிராந்தியங்களில் விளையும் பயிர். கோதுமை அநேகமாய் குளிர்ந்த நாடுகளில் தான் நன்றாய் விளையும். உஷ்ணநாடுகளில மற்றெல்லாத் தானியங்களைக் காட்டிலும் நெல் பயிர் தான் அதிகம். மக்காச் சோளம் அதற்கு அடுத்தாப்போல் கொஞ்சம் குறைவாய்ப் பயிர் செய்யப்படுகிறது.

இநதியாவில் மக்காச் சோளம் எல்லா இடங்களிலும் நன்றாய் வளர்கிறது. சில வருஷங்களுக்குமுன இந்தியாவில் இதை சுமார் எழுபது இலக்ஷம் ஏகராவில் பயிர் செய்து வந்தனர். வங்காள தேசத்தில் தான் இதை ஏராளமாய் சோளம், கேழ்வரகு முதலிய தானியங்களைப் போல் வயல்களில் சுமார் இருபது இலக்ஷம் ஏகராவில் பயிரிடுகின்றனர். சென்னை இராஜதானியில் வேலூர், பல்லாரி, கர்நூல், மதனபள்ளி, சேலம், கோயமுத்தூர், நீலகிரி, கஞ்ஜம் முதலிய ஜில்லாக்களில் இதை கத்திரி முதலிய காய்கறிகளைப் போல், ஓர் தோட்டப்பயிராகப் பெரிய ஊர்களுக்கு அருகில் பயிரிடுகிறார்கள. மைசூர் சமஸ்தானத்தில் பெங்களூர் முதலிய இடங்களில் விளையும் மக்காச்சோளம் மிகவும் பெரிய கதிர்கள் உள்ளதாயும் ருசியுள்ளதாயும் இருக்கும்.

மக்காச் சோளம், அரிசி, கேழ்வரகு முதலிய தானியங்களைக் காட்டிலும் பலம் தரும் உணவெனப் பலர் கருதுகின்றனர். மற்ற எல்லா தானியங்களையும் விட இதில் 'கொழுப்பு' அல்லது 'எண்ணெய்' அதிகம். 'சர்க்கரை'ச் சோளம் எனப் பொருள் படும் 'சுகர் கார்ன்' என்னும் ஜாதியில் மக்காச் சோளம் அதிக இனிப்பாயிருக்கும். தென் இந்தியாவில் சாதாரணமாய் மக்காச் சோளத்தை அதிகமாய் முற்றி உலரவிடாமல், கொஞ்சம் இளசாயிருக்கும் போதே அறுத்து விற்கின்றனர். இந்தக் கதிர்களை நீரில்



பம்பாய் வனிதா விச்ராந்திஞதாவில பொதுக் கூட்டத்தில் ஸ்ரீமான் கேலப்பன் பிரசங்கம் செய்தபோது எடுத்த படம். ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியும் ஸ்ரீமான் வி. ராஜகோபாலாச்சாரியாரும் இதரர்களும் மேடையில் உட்கார்ந்திருக்கின்றனர். ஜி. எஸ். ஏ.

வேகவைத்தும், நெருப்புத் தணலில் சுட்டும் இரஸ்தா ஓரங்களில் ஏராளமாய்ப் பெண்கள் கடைகளில் வைத்துச் சில்லரையில் விற்கின்றனர்.

இந்த வியாஸத்தில் அப்படி தோட்டத்தில் பயிரிடும் முறையைச் சுருக்கமாய் எழுதப்படும்.

மக்காச் சோளச்செடி நம் சாதாரண சோளச்செடியைப் போலவே இருக்கும். இந்தியாவில் சுமார் ஆறு அடி உயரம் வளரும். ஆனால் இந்தச் செடியில் ஒரு விசேஷம் உண்டு. ஆண் பூ வேறாயும் பெண்பூ வேறாயும் பூஷணி, புடல், வெள்ளிரி முதலிய செடிகளில் இருப்பது போல் இருக்கும். ஒரே செடி அல்லது சோளத்தட்டில் உச்சியில் ஒரு கதிர் இருக்கும். அது ஆண்பூ; அதன் கீழே, தண்டின் கணுவுகளில், ஒவ்வொரு கணுவுக்கும் ஒரு பூ வீதம் மூன்று நான்கு கதிர்கள் உண்டாகும். இவைகளின் மேலிருந்து செம்மயிர் போன்ற நீண்ட மயிர் குச்சு தொங்கும் இவைகள் தான் 'பெண்பூ'. இந்தப் பெண்பூ விதை பிடித்து முற்றினால் மக்காச்சோளக்கதிர் ஆகும்.

மக்காச்சோளம் சமநிலங்களிலும் சமுத்திர மட்டத்திற்குமேல் சுமார் 7,000 அடி உயரம் வரையில் உள்ள மலை நாடுகளிலும் நன்றாய் விளையும்.

### நிலம், நீர் முதலியன.

அதிக அழுத்தமான நீர் வடியாத களிமண் நிலங்களும், நீர் தேங்கும் சதுப்பு நிலங்களும் இதற்கு உதவா. மற்ற எல்லாவித நிலங்களிலும் இது விளையும். ஆனபோதிலும் சுபாவத்திலேயே நீர் வடிந்து போகும் மணல் கலந்த செவ்வல் நிலம் இதற்கு மிகவும் ஏற்றது. நிலத்தை ஆழமாய் உழவேண்டும். அடிமண்ணைக் கூடத் தகுந்த இரும்புக் கலப்பையாலாகிலும், 'பிகாக்ஸ்,' மண்வெட்டி முதலியவைகளாலாகிலும் நன்றாய்க் கொத்தவேண்டும். கட்டிகளையெல்லாம் உடைத்து மண்ணைப் புழுதி ஆக்கவேண்டும். மக்காச்சோளத்தின் வேர் நிலத்தில் சற்று ஆழமாய்ப் போவதால் இப்படி ஆழ உழவேண்டும்.

இந்தப் பயிருக்கு அதிக எருவு போடவேண்டும். ஏகரா ஒன்றுக்குச் சுமார் நாற்பது வண்டி சாணி எருவை அநேக தோட்டக்காரர்கள் போடுகிறார்கள். இந்தப் பயிருக்கு நனறாய் மக்காத சாணி எருவைக்கூடப் போடலாம். இந்த எருவை நிலத்தின்மேல் பரப்பி, நிலத்தை உழுதுவிடவேண்டும்.

இது மூன்று முதல் நான்கு மாதங்களில் அறுவடைக்குத் தயாராகும். பச்சையிலேயே அறுத்து, சுட்டுத்தின்ன, விதைத்த பின் இரண்டு மாதம் கழிந்தது முதல் மூன்று மாதம் வரையில் கதிர்களை அறுத்து உண்ணலாம்.

### விதைத்தல்.

அமெரிக்கா தேசத்து விதைகள் மிகவும் நல்லவையெனினும், இந்தியாவிலேயே விளைந்து உண்டாகும் விதைகள்தான் இந்தியாவில் கஷ்டமில்லாமல் நன்றாய் முளைத்து வளர்கின்றன.

இதை மழைகால ஆரம்பத்தில் விதைக்கவேண்டும். வடக்கே, ஏப்ரல் மாதம் முதல் ஜுலைமாதம்வரையில் கூட விட்டுவிட்டு கொஞ்சம் கொஞ்சமாய் விதைத்து, மூன்று நான்கு மாதங்கள் வரையில் கடையில் விற்பார்கள்.

சாரணமாய் இந்த விதையை உழவு சால்களில் ஆறு அங்குல தூரத்திற்கு ஒரு விதை வீதம் விதைத்து, சரியாய் முளைத்ததும் 18 அங்குலத்திற்கு ஒரு செடி வீதம் விட்டு இடையிலுள்ள மற்றச் செடிகளைப் பிடுங்கிவிடவேண்டும். ஒரு சாலுக்கும் மற்றொரு சாலுக்கும் சுமார் இரண்டடி தூரம் இருக்கும். ஆகையால் ஒவ்வொரு செடியும சுமார் மூன்று சதுர அடிப் பிரதேசத்தில் வளரும்.

விதையை நிலத்தில் சுமார் இரண்டு அங்குல ஆழத்தில் புதைக்கவேண்டும். அதிக ஆழத்தில் விதைக்கக்கூடாது. பிறகு சரியாய் நீர் வார்த்தால் நான்கு ஐந்து நாள்களில் விதை முளைக்கும். சுமார் பதினைந்து அங்குல உயரம் வளரும்போது, இந்தச் செடிகளைச் சுற்றி சுமார் நான்கு அங்குல உயரம் மண்ணை உயர்த்தி அணைகட்டவேண்டும். மறுபடியும் செடி $2\frac{1}{2}$ அடி உயரம் வளர்ந்தபிறகு இன்னொருதரம் மண்ணை அணைகட்டி செடிகள் வளரும் சால்களின பக்கத்திலுள்ள 'வரப்புகளை' சுமார் ஒரு அடி உயரமாக்கவேண்டும். இந்த வேலையைத் தகுந்த உழவு கருவிகளைக் கொண்டு கூடச் சுலபமாய்ச் செய்யலாம்.

### நீர்பாய்ச்சல்.

மழையில்லாவிட்டால், நான்கு தினங்களுக்கு ஒரு முறை சால்களில வெள்ளம் புரள நீர் பாய்ச்சவேண்டும். கதிர்களில் சோளம் கொஞ்சம் முற்றி, கிள்ளினால் பால் இன்னும் வந்துகொண்டு இருக்கும் பதத்தில், கதிர்களை அறுத்து உண்டால் மிருதுவாயும், இனிப்பாயும் இருக்கும்.

### மாசூல்.

செடி ஒன்றுக்குச் சுமார் மூன்று கதிர்வீதம் விளையும். காசுக்கு ஒரு கதிர் விற்றாலும் கூட ஏகரா ஒன்றுக்கு சுமார் 50 ரூபாய் தானியம் கிடைக்கும். இப்படி இளம் கதிர்களாய்ப் பறித்தால், மக்காசோளத்தட்டு பச்சையாயிருக்

(1590-ம் பக்கம் பார்க்க.)

## அனுபவ விநோதங்கள்

(ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு எழுதியது.)

ஒருவருக்குள்ள அக்கரை மற்றவர்க்கு இல்லை:—ஒருவர் ஒரு விஷயத்தைப்பற்றி ஆழ்ந்த யோசனையுடன் எழுதிக்கொண்டிருக்கையில் அவர் மனைவி சுடச் சுடக் காப்பி கொண்டு வந்து பருகும்படி வற்புறுத்தினாள். அவர் தாம் யோசிப்பதிலுள்ள சுவை இந்தக் காப்பியிலுண்டாவென்று தாம் எழுதுவதிலேயே கவனமானார். "நான் காப்பி பருக வேண்டுமென்று உனக்குள்ள அக்கரை எனக்கு இல்லை. சில சமயங்களில் ஒரு வேலையில் எனக்கு இருக்கும் அக்கரை உனக்கு இருப்பதில்லை. நான் எவ்வளவு சொன்னாலும் நீ அந்த வேலையைக் கவனிப்பதில்லை"யென்று தன் மனைவிக்குக் கூறினாராம்.

வீட்டுச் செலவு:—தன் கணவன் வீட்டிலுள்ளபோது அவரைத் தொந்தரை செய்து அதிகமாய் செலவிடும்படிச் செய்ய முடியும். ஆனால், தன் கணவன் வெளியூரிலிருக்கையிலோ ஒவ்வொரு காசாக எண்ணியே செலவிட நேரும். ஏனெனில், அது தன் கைப் பொறுப்பான நிர்வாகமாயிருப்பதினால்தான்.

ஆசிரிய ஒற்றுமை:—சில பத்திராசிரியர்கள் தங்களைக் காண வருகிற பத்திராசிரியர்களை மற்றவரின் முன்பு ஒரு சாமானியர்போல எடுத்துக் கூறி, தாம் ஏதோ உயரிய நிலையில் இருப்பதுபோன்று மேதாவித் தன்மை காண்பித்துக் கொள்ளுகிறார்கள். உண்மையிலேயே மேதாவிகளாயுள்ளோர் தம்மைக் காணவருவோரை எத்துணையோ அன்புடனும் வரவேற்கிறார்கள். சில பத்திராசிரியர்கள் ஒருவரையொருவர் அறிந்திருந்துங்கூட அதிகமாகக் கலவாமல் ஒரே தெருவில் இருவரும் வெவ்வேறு பக்கமாய் நடந்து செல்லுகிறார்கள். ஆனால் இவர்கள் பத்திரிகையில் எழுதும் சகோதர வாத்ஸல்யமோ வெகு பிரமாதமாயிருக்கும்.

பத்திரிகைகளின் தன் மதிப்பு:—ஒரு பத்திரிகை ஆதியில் எவ்வித அமைப்புகளுடனும் கொள்கைகளுடனும் தொடங்கப் பெற்றதோ, அதே அமைப்புடனும் கருத்துடனுமே எப்போதுமே நடத்தப்பட்டால் தான் அதற்குத் தன் மதிப்பு ஏற்படும்; ஒரு பத்திரிகைக்கு முக்கியமாய் ஏற்படும் மதிப்பு அதன் பத்திராசிரியரே பத்திரிகையின் முக்காற் பகுதிக்கும் விஷயங்கள் எழுதி, மற்றகால் பகுதிக்கு மட்டும் பிறர் வரையும்விஷயங்களைப் பதிப்பிப்பதேயாகும். இவ்விதமின்றி,பத்திராசிரியர் ஏதோ கொஞ்சம் எழுதி விட்டு, மற்ற முக்காற் பகுதியையும் மற்றவருடைய வியாசங்களால் நிறப்புவதாயின், அது பத்திரிகைக்கேனும் பத்திராசிரியருக்கேனும் மதிப்பு தருவதாயிராது.

ஜனனக் குறிப்பு:—குழந்தை பிறந்தவுடன் ஜெனன மரண ரிஜிஸ்தாரரிடம் தெரிவிக்க வேண்டுமென்பது விதி. சிலர் முனிசிபல் சேவகனிடம் தெரிவித்துவிடுகிறார்கள். அது மட்டும் போதாது. தாமே நேரில்சென்று ரிஜிஸ்தாரரிடம் பதிவு செய்யவேண்டும். அப்பொழுது குழந்தை பிறந்ததற்கு ஒரு அத்தாட்சிப்பத்திரமும் இவருக்கு இலவசமாகவே கொடுக்கப்படுகிறது.சிலர் இவ்விதம் எழுதி வைக்காமலே எழுதி வைத்ததாய் வீட்டிலுள்ளோருக்குக் கூறிவிடுவர். அவ்விதம் அவர்கள் கூறுகையில் ஜெனன ரிஜிஸ்தாரர் தந்த அத்தாக்ஷிப் பத்திரம் எங்கேயென்று கேட்போமாயின், இவர்களின் பொய் வெளியாகிவிடும்.

அதிர்ஷ்டக்கை:— சிலருக்கு அதிர்ஷ்டக்கையென்றும், அவர்கள் மண்ணைத் தொட்டாலும் பொன்னாகுமென்றும் கூறுவர். இந்த அதிர்ஷ்டக்காரரும் முன்பு பல தொழில்களைத் தொட்டு நஷ்டப்பட்டுப்போய், பிறகுதான் வேறொரு தொழிலைத் தொட்டுப் பெருநிதி தேடிச் செல்வரானார். இப்போதைய ஐசுவரிய வாழ்விலும் சில தொழில்களைத் தொட்டு நஷ்டமடைய நேர்ந்திருப்பதை அவர்கள் வெளியில் காண்பித்துக் கொள்ளாமலே மூடிவிடுகிறார்கள்.

பாத்தியதையைக் கௌரவித்தல்:—ஒருவர் தமது அன்பின் மிகுதியால் மற்றொரிடத்துள்ளவர்களைத் தனது பந்துக்களுக்கும் மேலாக நினைத்து, தாமும் அவ்வீட்டைச் சேர்ந்த மனிதனாகப் பாத்தியதை கொண்டாடினால், அந்தப் பாத்தியதையை மற்றவரும் மதித்துத் தங்களைச் சேர்ந்தோரைவிட அவருக்கே அதிகக் கௌரவம் தந்து பாராட்டுவது நன்றாகும்; அது பெருந்தன்மையுமாகும்; அதனால் பாத்தியதை கொண்டாடியவருடைய உள்ளமும் பூரிக்கும்; இது உத்தமர்களுக்கு மட்டிலாகும்; அன்னோரின் பரிசுத்த ஹிருதயம் யாவருக்கும் தெரிந்து விடுவதால் அவர் நினைக்கும் பாத்தியதையை எல்லோரும் மகிழ்வுடனே ஏற்றுக்கொள்கிறார்கள். கபடநெஞ்சினன் இவ்விதமாகப் பாத்தியதை பாராட்டிப்பேசவரும்போதோ அவனை அனைவருமே வெறுக்கத் தொடங்கி விடுவர். இவன் யார், அந்நியன் இவ்வளவு பேசுவதாவது என்று எதிர்க்கவும் முற்பட்டுக் கொள்வர்.

அமாவாசை, பௌர்ணமி:—இவ்விரண்டும் கனத்தநாட்கள். கவலைதரும் நாட்கள். எப்படியோ வெகுசீக்கிரம் 15- நாட்களுக்குள் நெருங்கி வந்துவிடுகின்றன. ஒருவர் கனத்த வியாதியில் கிடந்தால் இந்தப் பாழும் நாட்கள் எவ்விதமேனும் கஷ்டமின்றித் தொலையவேண்டுமே யென்று திகில் கொள்ளவைக்கிறது, வியாதியஸ்தனைச் சூழ்ந்துள்ளோர் இந்த நாட்களை நினைத்துக் கொண்டு கலங்கிக் கண்ணீர் விடுகிறார்கள்.




## நவநாகரீகக் குறிப்புகள்.

(காசினி எழுதியது.)

### புட்டாப் புடவைகள்.

* * * 'புட்டாப் புடவைகளை, அதிக விலை கொடுத்து வாங்கி என்ன பிரயோஜனம்? இடையே உள்ள பட்டின்மேல் மடிக்கும் பொழுது புட்டாக்கள் படுவதால் கறை விழுகிறதே? புடவையை மடிக்காமல் எப்படி உள்ளே வைப்பது? இதைவிட புட்டாப் போடாத சாதா உடலும், கரைக்கு அதிக சரிகையும் போட்ட புடவையே மேல் என்று நினைக்கிறேன்' என்று நீ எழுதி இருக்கிறாய். 'நீ சொல்லுவது என்னமோ நிஜம்தான். அதுவும் ஆங்காங்கே பெரிய புட்டாக்கள் போட்டிருக்கும் இலேசான நிறமுள்ள புடவைகளில் இந்தப் புட்டாக்கள் பட்டின் மேல் அழுந்துவதால் விழும் கறை பார்வைக்கு அவலக்ஷணமாகத்தான் இருக்கிறது. இந்தக் கறைகளைச் சுத்தம்செய்யவும்முடியவில்லை. இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் லேடி சின்னையா தன் மகளுக்கு ஒரு புட்டாப் புடவை வாங்கினாள். இலேசான நீல வர்ணம். பூக்கூடை மாதிரியில் பெரிய பெரிய பூக்கள் போட்டிருந்தன. அந்தப் புடவையை அவள் அதிகம் கட்டவே இல்லை. வாங்கின புதுசில் இரண்டு மூன்று தரம் கட்டினாள். அப்புறம் அதை மடித்து உள்ளே வைத்து விட்டாள். போன வாரம் ஏதோ பேச்சோடு பேச்சாக 'நீ ஏன் உன் ஆகாச நீலப் புட்டாப் புடவையைக் கட்டுகிறதே இல்லை? உன் தலையில் இருக்கும் வனஞ்சாம்பப் பூக்களுக்கும் அதன் நிறத்திற்கும் ஒத்திருக்குமே?' என்று கேட்டேன். ஒரு சிநேகிதி வீட்டில் வளைகாப்பு என்று அழைத்திருந்தார்கள். அதற்காக நாங்கள் புறப்பட்டுக்கொண்டிருந்தோம். 'சரி,' அதையே கட்டிக்கொள்ளுகிறேன். அந்தப் புட்டா தினுசு எனக்குப்பிடிக்கவில்லை. அதுதான் நான் அந்தப் புடவையை அப்படியே வைத்துவிட்டேன்,' என்று சொல்லிக்கொண்டே உடையை மாற்றப் போனாள். சற்று நேரத்திற்கெல்லாம் வேறு ஒரு சேலையைக் கட்டிக்கொண்டு, அந்தப் புடவையை அப்படியே கொசுவி எடுத்துக்கொண்டு வந்தாள். புடவையில் இடையிடையே சற்று மஞ்சளான கறைகள் விழுந்திருந்தன. அதை மறுநாள் 'டிரைகிளீனிங்' செய்து கொடுக்கும்படி அனுப்பினோம். உடலில் சரிகை வேலை செய்திருக்கும் சேலைகளைத் தங்களால் சுத்தம் செய்யமுடியாது என்று அந்த கடைக்காரர்கள் கூறி விட்டார்கள். அவர்கள் உயர்ந்த துணிகளை 'டிரைகிளீனிங்' செய்வதில் பேர்போன கடைக்காரர்கள்தான். என்ன செய்வது? அவளுக்கோ ஏற்கனவே தினுசு பிடிக்கவில்லை. அதிலும் கறைகள் விழுந்தபின் அதை அவள் கட்டுவாளா? கிழித்துச் சின்னக் குழந்தைகளுக்குப் பாவாடைகளாகத் தைத்து விட்டாள்.

இதனால் புட்டாப் புடவைகளே வாங்கக் கூடாது என்று உன்னைப் போல் நான் எண்ணவில்லை. புட்டாப் புடவைகள் அழகாகத்தான் இருக்கின்றன. புடவைகளை வருஷக் கணக்கில் அப்படியே மடித்த மடிப்புப் பிரியாமல் வைத்துவிட்டால் எப்படி? அடிக்கடி எடுக்காவிட்டாலும், இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு தடவையாவது எடுத்துப் பிரித்துப் பார்க்கவேண்டும். மேலும் புட்டாப் புடவைகளை மடிக்கும் பொழுது, இலேசான நிறப் புடவை, கறை விழலாம் என்ற சந்தேகம் ஏற்பட்டால், புடவையை இரட்டையாக மடித்து, நாலாக மடிக்கும்பொழுது புட்டாக்கள் பட்டின் மேல் படாமல் ஒரு வெள்ளைத் துணியை ஊடே கொடுத்து மடிக்கவேண்டும். மறுபடியும் ஒரு துணியை நடுவில் வைத்து மடித்துவிட்டால் கறைகள் விழாமல் இருக்கும். உன் மருமாளுக்குக் கூறைக்கு நீ முதலில் உத்தேசித்தபடி புட்டாப் போட்ட புடவையே வாங்கு. சற்று முன் ஜாக்கிரதையுடன் இருந்தால் கறைகள் விழாமல் பார்த்துக் கொள்ளலாம். புட்டாப் புடவைகள் சிறிய பெண்கள் கட்டினால் தான் நன்றாக இருக்கும். வயதானவர்கள் கட்டினால் அவ்வளவு ஏர்வையாக இருப்பதில்லை. அழகிய புட்டாக்கள் போட்ட புடவையை வாங்கிவிடு; சந்தேகப் படாதே.

### முத்து மாலை.

அன்று நான் சில சாமான்கள் வாங்குவதற்காகச் சுதேசி எம்போரியம் போயிருந்தேன். அங்கு முத்து மாலைகளில் இன்னும் ஒரு புதிய தினுசு பார்த்தேன். இது காப்பிக் கொட்டை மாலை தினுசில் செய்திருந்தது. மிகவும் சிறிய முத்துக்களைக் காப்பிக் கொட்டை மாலையின் முடிச்சுக்கள் போல் கோர்த்திருந்தது. இடையே தங்கச் சங்கலியும் மறுபடி ஒரு முத்து முடிச்சுமாகச் செய்திருந்தது. இந்த மாலை பார்வைக்கு மிகவும் அழகாக இருந்தது. சிறிய முத்துக்களானதால் விலையும் அதிக மிராது என்று எண்ணுகிறேன். தங்கச் சங்கிலிக்கு பதிலாக காபிக்கொட்டை மாலையைப் போலவே வேண்டுமானாலும் செய்யலாம். இந்த மாலையை அணிந்திருந்த மாது கிரீம், நிறப் பட்டுப் புடவை உடுத்தி, கையில் இரண்டு ஜதை முத்து வளையல்களும், காதில் ஒரு சிறிய முத்துக் கம்மலும், சிறிய முத்துக்கள் பதித்த ஒரு மோதிரமும், பெரிய ஒத்தை முத்து வைத்துச் செய்யப்பட்ட கொண்டை ஊசி ஒன்றும் போட்டுக் கொண்டிருந்தாள். காலில் சற்றுப் பழுப்பு நிறமான, வெள்ளைச் சரிகையில் வேலை செய்திருந்த சடாக்கள் போட்டிருந்தாள். அவளுக்கு இந்த அலங்காரம் வெகு பொருத்தமாக இருந்தது. நீ உன் பாட்டி ஜிமிக்கியைப் பிரித்து வேறு ஏதோ முகப்புக் கட்டி, அதில் தொங்கவிடப்பட்டிருந்த சிறிய நல்முத்துக்களை என்ன செய்வது என்று தெரியாமல் அப்படியே உள்ளே வைத்திருப்பதாகச் சொன்ன நினைவாக இருக்கிறது. இந்தத் தினுசில் முத்துமாலை செய்துகொள்; அழகாக இருக்கும்.

### குல்லாய்.

இதற்குப் பூநூல் அதிகப் பருமனாக இருக்கக்கூடாது. 'ஆண்டலூஷியன்' பூநூல் ஏற்றதாக இருக்கும். ஊசியும் இரும்பு ஊசிகள் கூடாது. மர ஊசிகள், அல்லது கொம்பு ஊசிகள் வேண்டும். முதலில் ஒரு ஊசியில் வேண்டிய நீளம் அடித் தையலைப் பின்னிக்கொள்ள வேண்டும். இது ஒரு காதோரத்தில் இருந்து மற்றைய காதோரம் வரையில் தலையை மூடக்கூடிய நீளமாக இருக்கவேண்டும். பிறகு தலையின் நீளத்திற்கு ஏற்றபடி ஐந்தாறு விரல் அகலத்திற்கு, சாதா பின்னல், அல்லது முடிச்சு, சங்கிலிபோன்ற இஷ்டமான தையல் பின்ன வேண்டியது. பிறகு நீளத்தை மூன்று பாகமாகப் பிரித்து இரண்டு ஓரங்களையும் முடித்து, நடுப்பாகத்தைப் பின்ன வேண்டியது. இதை நாலைந்து விரல் அகலத்திற்குப் பின்னின பின், முடித்த இரண்டு ஓரங்களையும், நடுவில் பின்னியிருக்கும் தையலின் இரண்டு பாகங்களையும் மேல் பாகத்தையும் சேர்த்துப் பின்னவேண்டியது. இப்பொ

(1588-ம் பக்கம் பார்க்க.)

## வஸ்தாத் விக்கிரமஸிங்

(1574-ம் பக்கம் தொடர்ச்சி.)

ந்தஸிங் விஜயசிங்கை யழைத்தார். அவன மாடிக்குச் சென்ருன். சுலோசனுவும் அவள் அத்தை மகனும் தனியேயிருந்தனர்.

ரஞ்சிதசிங்:—(ஒருவிதமான குரலில்) என் பிரிய முள்ள சுலோசனுவுக்கு எப்பொழுது என் மீது தயவு உண்டாகுமோ?

சுலோசனு:—என் என்னைத் தொந்தரவு செய்கிருய்? நான் உன்னைக் காதலிக்க வில்லையென்பதை உனக்கு எத்தனை தடவை சொல்லுகிறது?

ரஞ்சிதசிங்:—(சற்றுப்பதட்டமாய்) அப்படியானுல் நீ யாரைக் காதலிக்கிருய்?

சுலோசனு:—என் அந்தரங்கங்களை உனக்குத் தெரிவிக்க எனக்கு இஷ்டமில்லை.

ரஞ்சிதசிங்:—எனக்கு அது தெரியாது என்று நினைத்தாயோ? விஜயசிங் உன் காதலன். ஆனுல் அவன் ஒரு நய வஞ்சகன் என்பதை நீ அறிந்திலை. அவன் போடும் வெளி வேஷத்தைக் கண்டு நீ எளிதில் மயங்கி விட்டாய்?

சுலோசனு:—(கோபத்துடன்) அக்கிரமமாய் ஒருவரை நீ தூஷிப்பது நன்ருயில்லை. ரஞ்சிதசிங்! நீ வாயை மூடாவிட்டால் அப்புறம் செல்வேன்.

ரஞ்சிதசிங்:—சுலோசனு, பதருதே! நான் சொலலுவதை முற்றிலும் கேள். விஜயசிங் குஸ்தி செய்யும்பயில்வான் என்பது உனக்குத் தெரியுமா?

சுலோசனு:—(ஆச்சரியத்துடன்) என்ன? நீ சொல்வது உண்மையா?

ரஞ்சிதசிங்:—ஆம்! நமது கலாசாலையில் கணிதசாஸ்திர ஆசிரியாரகிய விஜயசிங் இரகசியமாய்ப்பல குஸ்திச்சண்டைகளில் போரிடும வஸ்தாத என்பது எனக்குத் தெரியும். அவன்தான் அடுத்த வாரம் ஞாயிற்றுக்கிழமை கலியுக பீமசேனனுகிய வஸ்தாத் விக்கிரமசிங்குடன் சண்டை போடப் போகிருன். 'பெயரில்லாப் பயில்வான்' நமது விஜயசிங்கே.

சுலோசனு:—நீ சொல்வது நிஜமென்று என்னல் நம்பக் கூட வில்லை. விஜயசிங்கா 'பெயரிலலாப் பயில்வான்'? ஒருக்காலுமிராது! மேலும் அவருக்கு ஐயாயிரம் ரூபாய் பணமேது? அவ்வளவு பெருந்தொகைக்கு அவர் எங்கே போவார்?

ரஞ்சிதசிங்:—(இகழ்ச்சியாய் நகைத்துக்கொண்டு) அவனுக்கா பணமில்லை? அவனுக்குச் சொந்தமாய்ப் பணமில்லாவிட்டாலும், பிறருடைய பணம் அவன் வசம் இல்லையா? அவன் நமது கலாசாலை ஆசிரியர்களது "பிராவிடென்ட் நிதி"யின் பொக்கிஷதாரனல்லவா?

ரஞ்தசிங்கின் வார்த்தைகள் சுலோசனுவுக்குச் சகிக்கவொண்ணுத ஆத்திரத்தையும் கோபததையும் உண்டுபண்ணின. உடனே அவள் எழுந்து, "போதும் அத்தான். அபாண்டமான பழியை நீர் ஒருவர் மீது சுமத்த முயலுவது கொஞ்சங்கூட சரியல்ல. அதற்கு நான் இடங் கொடுக்கமாட்டேன்" என்று அவனை வெறுப்புடன் நோக்கிச் சொல்லி விட்டு உள்ளே சென்ருள்.

III

ஆனுல் ரஞ்சிதசிங்கின் மனசில் விஜயசிங்கே வஸ்தாத் விக்கிரமசிங்கை எதிர்க்கப் போகும் "பெயரில்லப பயில்வான்" என்னும் நிச்சயம் வேரூன்றியிருந்தது. அந்தக் குஸ்திச் சண்டையில் அவன் ஆசிரியர்களின் பிராவிடென்ட் நிதியிலிருந்து ஐயாயிரம் ரூபாய் இரகசியமாய் எடுக்கப் போவது நிச்சயம் என்று எண்ணி அவன் அவனது குற்றத்தை வெளியிட்டு அவனைத்தண்டனைக்குள்ளாக்க வேண்டியது என்று தனக்குள் தீர்மானித்தான்.

விஜயசிங்குக்குத் தாய் தந்தையர்களில்லை. அவன் கலாசாலை மாணவர்களுக்கு ஏற்படுததப்பட்ட 'ஹாஸ்டலில்' ஒரு அறையில் வசித்துவந்தான். அவனறைக்குச் சென்று அவனது கணக்குப் புஸ்தகங்களையும் 'செக்' புஸ்தகங்களையும் பரிசோதிப்பது என்று முடிவு செய்துகொண்ட ரஞ்சிதசிங் ஒரு நாள் அங்கே சென்ருன். அறை திறக்கப்பட்டிருந்தது. விஜயசிங் ஸ்நாநம் செய்யச் சென்றிருந்தான்; அவன் மேஜைமீது அவன் 'செக்' புஸ்தகம் கிடந்தது. அதைப் புரட்டிப் பார்த்த ரஞ்சிதசிங் களிப்புடன் "ஹா" வென்று வாய்விட்டுக் கூவினுன். என்? முந்திய நாள்தான் விஜயசிங் வஸ்தாத் விக்கிரமசிங்கின் ஏஜண்டு ஏகாம்பரத்துக்கு ஐயாயிரம் ரூபாய்க்கு 'செக்' அனுப்பினுன் என்பதை அப் புஸ்தகத்தின் கடைசி ஏடு தெரிவித்தது. அந்தச் 'செக்' வசூலாகும் பாங்கியில் தான் ஆசிரியர்களின் 'ப்ராவிடன்ட்' நிதிப் பணம் போடப்பட்டிருந்தது. ஆதலால் விஜயசிங் அத்தொகையிலிருந்து பணம் எடுத்தான் என்பதில் சந்தேகமேயில்லை. கலாசாலை ஆசிரியர் ப்ராவிடன்ட் நிதியின் பொக்கிஷதாரியான அவன் நம்பிக்கை மோசம் எனனும் குற்றத்தைச் செய்துவிட்டான் என்று நிச்சயித்தான் ரஞ்சிதசிங்.

IV

"சுலோசனு! நாளை ஞாயிற்றுக்கிழமையன்ருே? நான் நகரத்துக்கு மோட்டாரில் போப்போகிறேன். நீயும் வருகிருயா? குஸ்திச் சண்டையைப் பார்க்கலாம்" என்ருன் ரஞ்சிதசிங். கலியுக பீமனுகிய வஸ்தாத் விக்கிரமஸிங்கை விஜயசிங் ஜயிக்கமுடியாது என்று நினைதத அவன் சுலோசனையை யழைத்துச் சென்று அவளுக்கு அவள் காதலன் தோல்வியடைந்து விழும் காஷியைக் காட்ட வேண்டுமென்று ஆவல் கொண்டான். விஜயசிங் அபஜயமடைவதைக் கண்டால் அவன்மீது சுலோசனு வெறுப்புக் கொள்வாள் என்று எண்ணிய அவன் அதற்குப்பின் அவன் செய்த குற்றத்தை வெளியிட்டு அவனைத் தண்டனைக்குட் படுத்துவது என்று தீர்மானித்தான்.

சுலோசனுவும் குத்துச் சண்டையைப்பார்க்க ஆவல் கொண்டாள். அவள் அத்தான் கூறினபடி வஸ்தாத் விக்கிரமசிங்கை எதிர்க்கப் போகும் பயில்வான் ஒருக்கால் தன்காதலன் விஜயசிங்காயிருக்குமோ வென்னும் சந்தேகம் அவளை வதைத்தது.

அவள், "ரஞ்சிதசிங்! நான உன்னுடன் வருவதற்கு ஆக்ஷேபணையில்லை. ஆனுல் நாம குத்துச்சண்டை பார்க்கப் போகிருேம் என்பது அப்பாவுக்குத் தெரியவேண்டாம். குஸ்திச்சண்டை என்ருல் அவருக்குப் பிடிக்காது. நான் அதைப் போய்ப் பார்க்க அவர் ஒருக்காலும் ஸம்மதியார்" என்ருள்.

V

நகரத்தில் குஸ்தி செய்யப்படும் மைதானத்தில் ஒரே கூட்டம். ஆயிரக் கணக்கான ஜனங்கள் "வஸ்தாத் விக்கிரமஸிங்"குடன் "பெயரில்லாப் பயில்வான" இடப்போகும் மற்போரைப் பார்ப்பதற்காகக்கூடியிருந்தனர். ஆண்கள், பெண்கள், கிழவர்கள், சிறுவர்கள், ஏழைகள், தனிகர்கள்— இப்படி வித்யாஸமின்றி அங்கே குழுமிய எல்லோரும் அப்பொழுது நடக்கப்போகும் குத்துச்சண்டையைக் கண்காணிக்கப் பரபரப்பாயும் ஆவலாயுமிருந்தனர்.

குத்துச்சண்டை போடப்படும் இடத்துக்கருகே அமைக்கப்பட்ட 'பெட்டி'களொன்றில் ரஞ்சித்சிங்கும் அவன் மாமன் மகள் சுலோசனுவும் உட்கார்ந்திருந்தனர். சுலோசனுவின் மனம் குழப்பத்தால் வாட்டமுற்றிருநதது. தனது காதலன் விஜயசிங் அங்கே 'பெயரில்லாப் பயில்வானுகத் தொன்றினுல், அவன் பிரஸித்திபெற்ற வஸ்தாத் விக்கிரமசிங்கை வென்று கீழே வீழ்த்தும் பலமும் சக்தியும் அவனுக்கு இருக்குமோ வென்று ஏங்கினுள்.

அப்பொழுது "பெயரில்லாப் பயில்வான்" என்று குஸ்தி செய்யும் இடத்தில் தோன்றிய ஒருவனைப் பார்த்து ஜனங்கள் கூச்சலிட்டனர். சுலோசனுவும் ரஞ்சித்சிங்கும் அவனை உற்று நோக்கினர்.

உடனே சுலோசனுவின் முகத்தில் சந்தோஷமும் ரஞ்சிதசிங்கின் முகத்தில் ஏமாற்றமும் தோன்றின. கலகலவென்று நகைத்த அவள், "அத்தான்! இப்பொழுதாவது நீ சொன்னது எல்லாம் உண்மையல்ல வென்பதை ஒப்புக்கொள்ளுகிருயா!" என்று வினவினுள்.

ரஞ்சிதசிங்:— "ஆம். நான் ஏமாந்து போய் விட்டேன். 'பெயரில்லாப் பயில்வானுகிய' இவன் விஜயசிங்கல்லவென்பது வாஸ்தவந்தான். அப்படியானுல் இவன் யார்" என்று வினவ பக்கத்து பெட்டியிலிருந்த கனவான், "இவன் பெயர் புரந்தரதாஸ். வடக்குப் பிரதேசத்தில் பலவஸ்தாதுகளை ஜயித்தவன். ஆனுல் காலவித்தியாஸத்தால் ஒரு குற்றத்துக்காக இவன் சிறைச்சாலைக்குப் போய் விட்டு சமீபத்தில் தான் விடுதலை பெற்று வந்தான். அதனுல்தான் தன் பெயரைப் பகிரங்கப் படுத்திக்கொள்ள அவன் இஷ்டப் படவில்லைபோலும்" என்ருர்.

அப்பொழுது, நாலாப் பக்கங்களிலிருந்தும், "வஸ்தாத் விக்கிரமஸிங்" 'கலியுக பீமன்' என்னும் கூச்சல்கள் கிளம்பின. புரந்தரதாஸை நோக்கி வந்த வஸ்தாதை உற்றுப் பார்த்த சுலோசனுவும் ரஞ்சித்ஸிங்கும் அடைந்த பிரமிப்புக்கு அளவேயில்லை.

என்? கலியுக பீமனென்னும் பட்டப் பெயர் பெற்ற வஸ்தாத் விக்கிரமஸிங் யாரெனில் மணிபுரம் கலாசாலை கணித ஆசிரியன்—சுலோசனுவின் காதலன—விஜயசிங்கே!

தனது காதலனே வஸ்தாத் விக்கிரமசிங்காய்த் தோன்றுவான்என்பதைச்சற்றும் எதிர்பாராத சுலோசனு சலனமற்ற தந்தப் பிரதிமைபோல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளது கண்கள் அப்பொழுது ஆரம்பித்த பயங்கரமான சண்டையை இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தன. அத்தகைய குஸ்திகளை அவள் அதுகாறும் பார்த்ததில்லையானதால், அச்சண்டை அவளுக்கு சகிக்கவொண்ணுத கூச்சத்தையும் பயத்தையும் அளித்தது. என்ருலும் தன் காதலன் வெற்றிபெறுவதைப் பார்க்க வேண்டுமென்னுமாசை அவளுள்ளத்தை வதைத்தது. புரந்தரதாஸால் வீசப்படும் குத்துகள் அவள் ஹிருதயத்தைப் பிளநதன. அவற்றை லக்ஷியம் செய்யாத அவன் எதிரி யாதொரு தளர்வுமடையாமல் ஜாக்கிரதையாய்ப் போர் செய்ததைக்

(15:8-ம் பக்கம் பார்க்க)



ஸ்விட்ஜர்லாந்து தேசத்தில் ஆல்ப்ஸ் மலையின் மீது செயிண்ட் மாரிட்ஸ் என்ற விடத்தில் குளிர் காலத்தில் பனிக் கட்டிமீது "ஸ்கையிங்" எனற ஒருவகை விளையாட்டை நடத்தும் காக்ஷி இதற்காகத் தனியாகத் தயாரிக்கப்பட்ட பலகைகளைக் கால் பூட்ஸ்களுடன் கட்டிக்கொண்டு முள்சக்கரங்களை ஊன்று கோலாகக் கொண்டு சருக்கி விளையாடுகிறார்கள். பி.பி.ஏ.



கிரிக்கெட்டு ஆடும் யானைகள். லண்டனில் ஒலிம்பியா என்ற விடத்தில் டீட்ராம்மில் ஸர்க்கஸில் யானைகள் கிரிக்கெட்டு ஆடிய காக்ஷி. மனிதர்களைப் போலவே இவை கால்களில் பட்டியும் தலையில் குல்லாயும் தரித்திருக்கின்றன. இ.என்.பி.



வட சீனவில் கொள்ளைக்காரர் தொல்லை தாங்க முடியாததால் அவர்களைப் பிடிக்க ஜப்பானியப் படை அனுப்பப்பட்டது. உறைந்து போன நானி ஆற்றின் மீது படைகள் நடந்து சென்ற காக்ஷி. ஜெனரல் லிங்லிங்பினும் காப்டன் குரிகி டோரினேவும் முன்னால் நிற்கின்றனர். இ.என்.பி.



டோக்கியோ நகரத்தில் ஆறுகளில் படகுகளில் வசிக்கும் தொழிலாளர்களுடைய குழந்தைகளுக்காக உள்ள ஆற்றுப் பள்ளிக்கூடத்திற்கு ஜப்பானிய சக்கரவர்த்தியின் சகோதரரும் அவர் மனைவியும் விஜயம் செய்தபோது எடுத்த படம். பள்ளிக்கூடக் குழந்தைகள் ராஜ குடும்பத்தினரை வரவேற்ற காக்ஷி. இ.என்.பி.



இங்கிலாந்தில் செல்வி ஆர்ட்ஸ்பால் என்ற வருஷாந்தர நடனத்திற்குச் சிலர் நூதன உடைகளில் வந்திருந்த காக்ஷி. ஜி. எஸ். ஏ.




5000 கூழாங்கற்களைக்கொண்டு 2 மாத காலம் சிரமப்பட்டுக் கட்டப்பட்ட மீன்காக்ஷி சாலை. தகுந்த உருவமுள்ள கற்களைப் பொறுக்கி எடுக்க 3 மாதத்திற்கு மேல் பிடித்தது. படத்தில் ரோஸ் சீக்ளர் என்பவர் மீனகளுக்கு ஆகாரம் கொடுக்கிறுர். இது அமெரிக்காவிலிருக்கிறது. பி.பி.ஏ.




டம்பாயிலும் நாகபுரியிலும் பரிசு பெற்ற ஸ்ரீமான் அச்சர்க்கர் என்ற இந்திய சித்திர நிபுணர் (23 வயது) லண்டனில் மேற் பயிற்சி பெற்று வருகிறுர். லண்டனில் இந்தியா மாளிகையில் அவர் எழுதிய வர்ணப்படங்கள் காக்ஷிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. இ.என்.பி.



ராமனுதபுரம் ஜில்லா போர்டுத் தலைவராகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ராமனுதபுரம் ராஜா ஸ்ரீமான் ஆர். ஷண்முக ராஜேச்வர சேதுபதி. கே. டி. வி.



மதுரை ராமனுதபுரம் ஜில்லாக் கூட்டுறவு பாங்கின் புதிய தலைவர் ஸ்ரீமான் இ. எஸ். சுந்தா (மதுரை வக்கீல்.) பி. எஸ். கே.



பிகானீரில் சமீபத்தில் கூடிய 23-வது அகில இந்திய ஆயுர்வேத மகாநாடு. தலைவர் ஊர்வலமாக அழைத்துச்செல்லப்படும் காக்ஷி. பி. பி. பி.



சென்னை ராயப்பேட்டை இந்திய ஊழியர் சங்கத்தில் ஸ்திரீகள் கூட்டமொன்றில் ஸ்ரீமான் தேவதாஸ் காந்தி தீண்டாமை விலக்கைப்பற்றிப் பிரசங்கம் செய்தபோது எடுத்த படம். பி. என். வ.



6 வாரமான கிங் சார்லஸ் என்ற ஒரு உயர்ந்த ஜாதி நாய்க்குட்டி. பிறந்தது முதல் கையால் வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது. அது கால் ராத்தல் எடை கூட இல்லை. அதன் எஜமானியின் பூட்ஸ் ஒன்றில் உட்கார்ந்திருக்கிறது. டபிள்யூ. என். பி, எஸ்



சென்ற வாரம் சென்னை இந்திய சாமான் பிரசார சபையின் ஆதரவில் கோகலே ஹாலில் ஸ்ரீமான் ஆர். என். ஆரோக்கிய சாமி முதலியார் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்த போது எடுத்த படம் பி என் வ

ஹாஸ்யப்பகுதி

## லோக ஸஞ்சாரியின்

# பரமானந்தக் குறிப்புகள்

(ஏகாந்தவாஸி எழுதியது.)

முஹாம்:—ஸே—சமஸ்தானம்

இந்த சமஸ்தானாதிபதி நாளையதினம் தர்பார் ஒன்று நடத்தப் போகிறார். இவ்வைபவம் இந்த சமஸ்தானமிருக்கும் ஜில்லா கலெக்டரை குஷிபபடுத்துவதற்காக நடததப்படுகிறதெனக் கேழ்விப்படுகின்றேன். முக்கிய விருந்தாளியான கலெக்டர் துரைமகனாரின் ஸவாரிக்கு ரஸ்தாவில் யாதொரு தங்கு தடைகளும் ஏற்படாமலிருப்பதற்காக, முன் குறிப்புகளில நான பிரஸ்தாபித்த $1\frac{1}{4}$ச் சதுர மைல் விஸ்தீரண சமஸ்தானத்திலிருந்து, இந்த சமஸ்தானத்திற்கு வரும் நாற்பது மைலதூரமுள்ள ரஸ்தா முழுவ துமம், மோட்டார்களில சவாரி செய்கிறவர்களைத் தவிற மற்றக் கட்டைவண்டிக்காரர்களுக்கும், பாதசாரிகளுக்கும், நடமாட்டம் கடநத மூன்று நாட்களாக, சமஸ்தானாதிபதியின் உத்தரவின்மேல் தடுக்கப் பட்டிருக்கின்றது. இக்காரணத்தால், நான் பொது ரஸ்தா வழியாக எனது பிரயாணத்தைச் செய்யமுடியாமல், காடு மேடுகளைக் கடந்து, குறுக்கு வழியாக இந்த சமஸ்தானத்துக்கு வந்து சேரும்படியாயிற்று.

இப்படிப் பொது ரஸ்தாப் போக்குவரத்துக்கு நாள் கணக்கில், கலெக்டரின் ஸவாரி சௌக்கியத்திற்காக தடை செய்யப்பட்டது, நான் சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு விதத்தில் நன்மையாகவே முடிந்தது. ஒற்றடிப் பாதையின் வழியே பிரயாணஞ் செய்தமையால், பல கிராமங்களின் நிலைமையைக் கண்டறிய சந்தர்ப்பம் வாய்ந்தது. இந்தப் பிராந்தியங்களில், பருவமழை தவறாது பொழிந்தால், நெல் பயிரொழிந்த மற்றெல்லா தானியங்களும் அமோகமாய் விளையும். கால் நடைகள் பிரதியொரு கிராமத்திலும் ஏராளமாக இருக்கின்றன. தயிர், பால், வெண்ணெய் ஆகிய பதார்த்தங்கள் வெகு சகாயம். ஆனால், ஒவ்வொரு கிராமத்திலும், ஜனங்கள் குடிக்கத் தண்ணீர் கிடைக்கப் பெறுவதற்குப் படும் கஷ்டம் சொல்லத் தரமன்று. எவ்வளவு ஆழம் கிணறுகள் வெட்டினாலும், தண்ணீர் கிடைக்கப்பெறுவது கஷ்டம். அதவா, தண்ணீர் ஊற்றுகள் கிடைக்கப்பெறினும், அவை வாயில் வைக்கமுடியாத அவ்வளவு உப்புக்கைப்புடையதாயிருக்கும். ஐந்நூறு, ஆயிரம்செலவழித்து, நல்லகிணறுகளை வெட்டிக் கட்ட கிராம வாசிகள் அசக்தர்களாக இருக்கின்றார்கள். இக்காரணத்தினால், கிராம ஜனங்கள் ஒரு குடம் குடி நீருக்காக நான்கு ஐந்து மைல் தூரம் சென்று எடுத்து வர வேண்டியிருக்கின்றது. இப்பிராந்தியங்களில், பாதசாரியாக



அவர் கையிலிருந்த சொம்பை வாங்கி அதிலிருந்த ஜலத்தில் பாதியை மடமடவென்று குடித்துவிட்டேன்.

சஞ்சாரஞ்செய்ய முற்படுகிறவர்கள் எப்பொழுதும் தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் போதிய அளவு தண்ணீரையும் சுமந்து செல்ல வேண்டும். இல்லாமற்போனால் அவஸ்தைப்பட வேண்டியதுதான். ஒவ்வொரு கிராமத்திலும் குடி தண்ணீருக்காக ஒரு பொதுக் கிணறு வெட்டிக் கொடுக்கும்படி கடந்தஐம்பது வருடங்களாக, இந்தக் கிராம ஜனங்கள், காருண்யம் பொருந்திய பிரிட்டிஷ் பம்பாய் கவர்ன்மெண்டுக்கு விண்ணப்பங்களை அனுப்பிக்கொண்டே வருகிறார்களாம். இந்த ஐம்பது வருடங்களிலும், ஒரு வருஷத்திலாவது, ஒரு கிணற்றையாவது வெட்டிக் கட்டிக் கொடுப்பதற் கனுகூலமாக கவர்ன்மெண்டின் பணக் கஷ்டம் நிவர்த்தியானதில்லையாம். இவ்விஷயத்தை எனக்கு வழியில் துணைவனாகக் கிடைத்த எனது நண்பர் கூறினார்.

இந்த நண்பரைப்பற்றி இரண்டொரு வார்த்தை கூறியே தீரவேண்டும். இவருடன் நடத்திய சம்பாஷணையின் பயனாக எனது பழைய எண்ணங்களில் பல என மனதை விற்று அகன்றுவிட்டன. இவரை-ஸே சமஸ்தானத்திற்குச் செல்லும் குறுக்குப் பாதையில் நடு வழியில் சந்தித்தேன். இவருடைய முகக் குறியாலும் அங்க அவயவங்களின் அமைப்பினாலும், இவர் தென்னிந்தியராக இருக்க வேண்டுமென்று ஊகித்தேன். என்னைப் போலும், இவரைப்போலும், ஸஞ்சாரிகளாக ஏற்பட்டவர்களுடைய உடைகளைப் பார்த்துவிட்டு ஒருக்காலும், இவர் இன்ன பிராந்தியத்தைச் சேர்ந்தவரென்று நிர்ணயித்துவிட முடியாது. நன்னிலம் தாலூக்கா அம்பல் திருமாகாள கிராமத்தைச் சேர்ந்த தாதர்கள் காசிப் பிராமணர்களாக பக்கத்துக் கிராமத்துக்குச் சென்று உலாவி வரும்போதும் அவர்களை அடையாளங் கண்டு கொள்ள சாமான்யர்களால் முடிவதில்லை. வெகுவாய் நெருங்கிப் பழகினாலொழிய, ஸாதுக்கள், யாத்ரீகர்கள் ஆகியவர்களின், ஜாதி, குல, மத, வகுப்பு சம்பந்தங்களைக் கண்டுகொள்ள முடியாது. எனவே, நான் இவரைக் கண்டதும், கன்னட பாஷையில் பேசத்தொடங்கினேன். அவர் ஹிந்துஸ்தானியில் பதில் சொன்னார். அவர் பேசிய ஹிந்துஸ்தானியின் தன்மையிலிருந்து, இவர் வட இந்தியர் அல்லவென்பதையும், கன்னடமும் இவருக்குத் தெரிந்திருக்கின்றதென்றும் கண்டுகொண்டு, தமிழில் அவர் செல்லுமிடம் எது என்பதைக் தெரிவிக்கும்படி கேட்டேன். அவர் சிறிது என்னை உற்று நோக்கி விட்டு "நீங்கள் எந்த ஊர்" என்று தமிழிலேயே பதில் கேள்வி கேட்டார். இதன் பிறகு நாங்கள் ஒருவரை யொருவர் நன்கு பரிச்சயப் படுத்திக் கொண்டு பல விஷயங்களையும் பற்றி அளவளாவி சம்பாஷித்துக்கொண்டே நடக்கத் தொடங்கினோம்.

பலவிஷயங்களைப்பற்றிப் பிரஸ்தாபம் நடந்த பிறகு, எங்களுடைய பேச்சு, ஆதித் திராவிடர்களுக்கு ஆலயப் பிரவேச உரிமையளிக்க வேண்டுமென்று சில நாட்களாக நடந்துவரும் கிளர்ச்சியை நோக்கித் திரும்பியது. நான் உபய தரப்புகளிலும் கூறப்படும் வாதங்களை எடுத்துச் சொல்லிக்கொண்டு வருகையில், எனது நண்பர் சரேலென்று எனக்கு முன்னால் வந்து நின்று, என்முகத்தை உற்று நோக்கி "பிறர் கூறும் வாதங்கள் ஒரு புறமிருக்கட்டும்; உம்முடைய சொந்த அபிப்பிராயம் இவ்விஷயத்தில் என்ன?" என்று உத்வேகத்துடன் வினவினார். "சாமியாரே! என்னுடைய சொந்த அபிப்பிராயத்தைக் கேட்டால், தீண்டாதவர்களுக்கு, ஆலயங்களில் பிரவேசிக்க உரிமையளிப்பதோடு நின்றுவிட நான் சம்மதியேன். அவர்களிலேயே, யோக்யமானவர்களைப் பொருக்கியெடுத்து, எல்லாக் கோயில்களிலும், அர்ச்சகர்களாகவும், குருக்கள்களாகவும் நியமனம செய்துவிடலாமென்பது எனது அபிப்பிராயம். நான வாய்ப்பேச்சளவில் இப்படிச் சொல்லுகின்றவனல்லவென்பதை நிரூபிப்பதற்காக, உம்முடைய ஜாதிமதகுலம் இன்னதென்பதையே விசாரியாது, நீங்கள் வைத்துக்கொண்டிருக்

கும், செம்பிலுள்ள தண்ணீரை அருந்துகிறேன். பாரும்!'' என்று சொல்லி, அவர் கையிலிருந்து, சுத்த ஜலம் நிறைந்த செம்பை வாங்கி அதிலிருந்த பாதி நீரை ஒரே மூச்சாய்ப் பருகிவிட்டு, செம்பை அவரிடம் திரும்பக் கொடுத்தேன். காகமிகுதியால் நான் செய்த இச்செய்கை, அவருக்கு, என்னிடம் மிகுந்த நட்பையும், எனது அந்தரங்க சுத்தியில் நம்பிக்கையையும் உண்டுபண்ணிவிட்டதெனக் காண்கிறது. ஏனென்றால், அவர், உடனே பின்கண்ட தமது சொந்த அனுபவங்களை என்னிடம் வெகு விவரமாக எடுத்துச் சொன்னார்:—

“ஸ்வாமி! நான் ஆதித்திராவிட குலத்தில் உதித்தவன். குருக்கண்ணன்குடிசேரிதான் எனது ஊர். நான் கடந்த பத்து வருடங்களாகவே, ஆலயப்பிரவேச உரிமையை யாரையும் கேட்டுப் பெறாமல், அனுபவித்து வருகின்றேன். தென்னிந்தியாவில் நான் கர்ப்பக்கிரஹம் வரையிலும் அதற்குள்ளும் சென்று ஸ்வாமி தர்சனம் செய்யாத பிரபல தேவாலயங்களே கிடையாதென்று துணிவுறக் கூறுவேன். மூன்று முறை ராமேச்வரத்திற்குச் சென்று, கங்கை தீர்த்தத்தை என் கையால் வாங்கிக்கொண்டு போய் பட்டரிடம் கொடுத்து, அருகிலிருந்து அபிஷேகம் நடத்தியிருக்கின்றேன். மதுரை ஸ்ரீ மீனாக்ஷியம்பாளையும், ஆரூர் ஸ்ரீ தியாகராஜரையும், மத்தியார்ஜுனம், மஹாலிங்கத்தையும், சிதம்பரம் நடனஸபாபதியையும், சிக்கல் சிங்காரவேலரையும், நான் கோவிலுக்குள் சென்று பன்முறை தரிசனம் செய்திருக்கின்றேன். எந்தத் தேவாலயத்திலும் எனக்கு எவ்விதத் தடையும் ஏற்பட்டது கிடையாது. எனவே தற்போது நடைபெறும் கிளர்ச்சியைப்பற்றி நான் கவனிப்பதே இல்லை'' என்றார் எனது நண்பர்.

“சாமியாரே! அது எப்படி உமக்குச் சாத்தியமாயிற்று?'' என்று நான் வினவினேன்.

அவர் உடனே கீழே உட்கார்ந்து மூட்டைக்குள்ளிருந்த ஒரு துணி முடிப்பை எடுத்து அவிழ்த்தார். அதனுள், தெள்ளிய விபூதி, கோபிச்சந்தனக்கட்டி, நாமக்கட்டி, ஸ்ரீசூர்ண டப்பி எல்லாமிருந்தன. அவற்றை எனது நண்பர் சுட்டிக்காட்டி “ஸ்வாமி, இவைதாம் எனக்கு எல்லா ஆலயங்களிலும், தங்கு தடையற்ற பிரவேச உரிமையை அளித்து வந்திருக்கின்றன. விஷ்ணு ஆலயங்களுக்குள்ளானால், த்வாதச நாமங்களும், சிவாலயங்களானால், திருநீற்றுப் பூச்சும், எனது சரீரமெல்லாம் நிறைந்திருக்கக் காணலாம். முதற் சொன்ன இடங்களில், தாஸனாகவும் பின்னால் சொன்ன இடங்களில், பரதேசியாகவுமிருப்பேன். இரண்டிடங்களிலும், எனக்கு உயர் ஜாதி ஹிந்துக்களுக்குள்ள சுதந்தரத்தைவிட அதிக சுதந்தரமுண்டு'' என்றார்.

“உம்முடைய உண்மையான அடையாளத்தை காட்டிக் கொள்ளாமையால் இந்த உரிமையை அனுபவித்து வந்திருக்கின்றீர்? நீர் யாரென்பது வெளிப்பட்டு விட்டால்?''

“ஸ்வாமி! நான் ஆதித்திராவிடனென்றோ, தீண்டத்தகாதவனென்றோ, எனது நெற்றியில் அழியாத எழுத்தில் எழுதிவிடப்பட்டிருக்கவில்லை. நான் தீண்டத் தகாதவனென்று என்னை நினைத்துக் கொள்வதில்லை. அந்த எண்ணமே எனக்குக் கிடையாது. கோயிலுக்குச் செல்லுகிறவர்கள், ஸ்வாமியைத் தர்சனம் செய்துவிட்டுப் போகச் செல்கின்றார்களேயன்றி, அங்கு வந்து கூடுகிறவர்களில் ஒவ்வொருவருடைய ஜாதிமத குலத்தையும்விசாரித்துக் கொண்டிருப்பதற்கல்ல. என்னை இதுகாறும் எவரும் எந்தக் கோயிலிலும் எவ்விதக் கேள்விக்கும் உட்படுத்தியதில்லை. அப்படி உட்படுத்தியிருப்பினும், நான் உட்படமறுத்திருப்பேன்'' என்று கம்பீரமாய்ச் சொன்னார்.

“உமக்கிருக்கும் மனோதைரியமும், சாமர்த்தியமும் எல்லோருக்கும் இருக்குமா? உமது வகுப்பினர் எல்லோரும் நீர் அனுபவித்து வரும் உரிமையை எப்படி அடைவது?''

“ஸ்வாமி! இப்பொழுது உரிமைக்காக வாதாடுகிறவர்கள், பக்திமேலீட்டினால், ஸ்வாமியைத்தரிசிக்கவேண்டுமென்ற ஆவல் கொண்டு அவ்வாதத்தைக் கிளப்புகிறவர்களல்ல. அந்த உரிமைக்காகப் போராடுகின்றார்கள். அது அகப்பேய், அந்தப் பேய் உபயக் கக்ஷிகளையும் பிடித்து ஆட்டுகின்றது'' என்று விடையளித்தார்.

“உமது வகுப்பைச் சேர்ந்த சகலருக்கும், அந்த உரிமையுண்டென்று நிர்ணயிக்கப்பட்டுப் போவது நல்லதல்லவா?'' என்று நான் மீண்டும் வினவினேன்.

அதற்கு அவர் “ஒருவனுக்குரிய உரிமை அவனாலேயே சம்பாதித்துக் கொள்ளப்படவேண்டும். பிறர் அளிக்கும் உரிமை உண்மையானதாகவோ, சாச்வதமானதாகவோ இராது. ஆலயப்பிரவேச உரிமை பெறுவதனால், ரூபாய்க்கு 17 அணாவும், அது இல்லாமையால் ரூபாய்க்கு பதினைந்தே அணாவும் கிடைத்து வருவதாகஇருந்தால், எங்கள் வகுப்பினரனைவரும் ஒரே நாளில், ஆலயப்பிரவேச உரிமையைத் தேடி அடைந்து விடுவார்கள். ஆயிரம் பீரங்கிகளும் அவர்களை அடக்க முடியாது. ஆலயப் பிரவேசம் செய்தவுடன், தங்கள் வசத்திலுள்ள ரூபாய்க்கு 17-அணா கிடைக்காதென்பதும், அது இல்லாமையால், 15-அணாவாகக் குறைந்து விடப் போவதில்லையென்பதும், அவர்களுக்கு நன்கு தெரியும். இதிலடங்கிய உட்கருத்தை ஆழ்ந்து யோஜித்துத்தெரிந்து கொள்ளும்'' என்று கூறிவிட்டு, தாம் துவாரகைக்கு ஸ்ரீ கிருஷ்ணனை தரிசிக்கச் செல்வதாயும், திரும்புகாலில், சாத்தியமானால் நாஸிகத்தில், கோவர்த்தன தேவாலயத்தில் சந்திக்க விரும்புவதாயும், இவ்விவாதத்தை அங்கு தொடர்ந்து நடத்தலாம் என்றும் சொல்லி விடைபெற்றுக் கொண்டுவேறு யாதையில் போய் விட்டார்.

## வஸ்தாத் விக்கிரமஸிங்

(1582-ம் பக்கம் தொடர்ச்சி.)

கண்ட அவள் “ஈச்வரா! இந்தச் சண்டை சீக்கிரமாய் முடிவு பெறாதா?'' என்றும், “என் அன்பர் வெற்றி பெற வேண்டும்'' என்றும் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தாள். முடிவில் புரந்தரதாஸ் ஸிம்மத்தைப்போல் குஸ்தி செய்த வஸ்தாத் விக்கிரமஸிங்கின் அடிகள் தாங்காது கீழே விழுந்ததை அவள் பார்த்தாள்.

அவ்வளவுதான் அவளுக்குத் தெரியும். அதுவரையில் அவளைக் கவர்ந்த உணர்ச்சிகளின் வேகத்தை அவளால் தாங்க முடியவில்லை. அழகிய பூங்கொடி கீழே சாய்வதைப் போல் அவள் மூர்ச்சையாய் விழுந்தாள். ஆனால் அதற்குள் அவளைப் பார்த்த அவள் காதலன் வஸ்தாத் விக்கிரமஸிங்கென்னும் விஜயசிங் அவளிடம் ஓடி அவளைத் தழுவியெடுத்து தன் மடிமீது வைத்துக்கொண்டான்.

VI

மறுநாட் காலை கலாசாலைத் தலைமை ஆசிரியர் ஆநந்தசிங் வீட்டின் கூடத்தில் அவரும் அவர் மகள் சுலோசனாவும் வஸ்தாத் விக்கிரமசிங் என்னும் விஜயசிங்கும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். ஆநந்தசிங்கிடம் நமது வஸ்தாத் தனது அந்தரங்க விருத்தாந்தத்தை ஒன்றும் விடாமல் கூறினான்.

“நான் சிறு வயதிலிருந்தே குஸ்தி முதலிய தேகப்பயிற்சி சாதனங்களைப் பயின்றிருந்தேன். என் மாமன் ஒரு பெரிய பயில்வான். அவரிடமிருந்து குஸ்தி வித்தை கற்றுக்கொண்ட நான் என் கலாசாலைப் படிப்புக்குப்பின்னர், ஒன்றிரண்டு குஸ்திப் பந்தயங்களில் ஜயித்து பரிசுபெற்றேன். கலாசாலைக்கு வந்து வேலையிலமர்ந்த பின்னும் குஸ்தி போடும் ஆசை என்னை விடவில்லை. இங்குள்ளவர்களுக்குத் தெரியாமல் நான் ‘வஸ்தாத் விக்கிரஸிங்’ என்னும் பெயர் பூண்டு நகரத்தில் பல குத்துச் சண்டைகளில் ஜயம் பெற்றேன். ஏராளமான பணப் பரிசுகளும் தோடாக்களும் நான் இனாமாகப் பெற்றுள்ளேன். என் ஏஜண்டு ஏகாம்பரத்தைத் தவிர ஒருவருக்கும் நான் யார் என்பது தெரியாது'' என்று விஜயசிங் கூறிமுடித்தான்.

ஆநந்தசிங், “அப்பா! உன் மீது என் மருமகன் ரஞ்சித்சிங் அக்கிரமமாகச் சந்தேகப்பட்டானாமே,'' என்று வினவ, விஜயசிங், “ஆம்! ப்ராவிடென்ட்நிதியிலிருந்து நான் ஐயாயிரம் ரூபாய் எடுத்து ஏகாம்பரத்திடம் கொடுத்தேன் என்று அவன் நினைத்தது தவறு. அத்தொகை என்சொந்தப்பணமே. தனது தவறுதலை யுணர்ந்ததும் என்னிடம் அவன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்'' என்றான்.

தலைமையாசிரியர் “சரி! இனிமேல் நீ பயில்வான் தொழிலை விட்டுவிடவேண்டியது. கலாசாலை உத்தியோகத்துக்கும் அதற்கும் ஏர்வையே யல்ல. என்ன சுலோசனா! மனைவியாகப் போகும் நீ, உன் கணவனைச் சீர்திருத்தம் செய்வாய் என்று நம்புகிறேன்'' என்று புன்னகையுடன் கூறினார்.

அதைக்கேட்டு நகைத்த விஜயசிங் “என் மனைவிக்கு அவ்விதமான வேலை நான் வைக்கப்போவதில்லை. ஏனெனில் நேற்று நிகழ்ந்த குத்துச் சண்டையே என் கடைசிச் சண்டை. வஸ்தாத் விக்கிரமசிங் என்பவன் இனியாதொரு குஸ்திச் சண்டைக்கும் போகப்போவதில்லையென்பது ஸத்தியம்'' என்றான். அவன் காதலியும் புன்முறுவல் செய்தாள்.

## நவ நாகரீகக் குறிப்புகள்.

(1581-ம் பக்கம் தொடர்ச்சி.)

முழுது ஊசியில் அதிகத் தையல்கள் நெருங்கி இருக்குமாதலால் தையல் நழுவி விடாமல் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் குல்லாயில் ஓட்டை விழுந்து விடும். கொஞ்சதூரம் பின்னி குல்லாய் வடிவம் அழகாக அமைந்ததும், ஓரங்களுக்கு குச்சுகள் பின்னி, தையலை முடித்துவிடவேண்டியது. பிறகு உள்ளுத் துணி வைத்துத் தைத்து, நூலில் நிறத்திற்கு ஏற்றாற்போல் கட்டுவதற்கு இரண்டு ஓரங்களிலும் ரிப்பன் வைத்துத் தைத்து உபயோகிக்கவேண்டியது. குல்லாயை ஒரு நிறத்திலும் குச்சுக்களை ஒரு நிறத்திலுமாகப் பின்னுவதும் உண்டு.

# ஸ்தலமகாத்மியம்

## ஸ்ரீரங்கப்பட்டணம்

(ஸ்ரீமதி எஸ். ஆர். ஜெயம்மாள் எழுதியது.)

இந்த க்ஷேத்திரம் மைசூருக்கும் பெங்களூருக்கும் மத்தியிலுள்ள ரயில்வே லயனில் மைசூரினின்று 10 மைல் தூரத்திலிருக்கும் ஓர் சிறிய ரயில்வே ஸ்டேஷனுடனிருக்கிறது. இவ்வூர் 1779-ம் வருஷத்திற்குமுன் மைசூர் தேசத்திற்கு ராஜதானியாக விளங்கிற்று. இவ்வூர் மைசூர் சமஸ்தான சரித்திரத்தில் மிகவும் பிரசித்திபெற்றது. இவ்வூரை மைசூர் மகாராஜாவின் சைனியத்தில் ஓர் சிறிய சிப்பாயாகவிருந்து வரவர விருத்தியடைந்து கடைசியில் மைசூர் மகாராஜாவினின்றும் ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு தானே ஆண்ட மகம்மதிய அரசன் ஹைதர் அலியின் இராஜதானியாகவிருந்தது. பின் அவன் மகன் டிப்பு ஸுல்தானும் இவ்வூரையே ராஜதானியாக வைத்துக்கொண்டு ஆண்டு வந்தனன். தன் தந்தையை எதிர்த்த இங்கிலீஷ் சைனியங்களுடன் இவன் மிகவும் கஷ்டபட்டு யுத்தம்செய்தும் 1779ம் வருஷம் இங்கிலீஷ்காரர்களால் கொல்லப்படவே ஸ்ரீரங்கபட்டணம் அன்றிலிருந்து பிரிட்டிஷ் காரர்கள் வசமாயிற்று பின் பிரிட்டிஷார்கள் மறுபடியும் ஸ்ரீரங்கப்பட்டணத்தை 50,000 ரூபாய்க்கு மைசூர் அரசருக்குக் குத்தகையாக விட்டனர். இவ்வூரில் டிப்பு சுல்தான் காலததில் ஏற்பட்ட பார்க்கவேணடிய அனேக விசேஷ இடங்களிருக்கின்றன.

மற்றும் இவ்வூர் ரெயில்வே ஸ்டேஷனில் இறங்கி கொஞ்ச தூரம் சென்றால் ஸ்ரீரங்கநாதர் கோயிலை யடையலாம். அக்கோயிலை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தே காணலாம். திருச்சிறாப்பள்ளிக்கடுத்தாப் போலிருக்கும் ஸ்ரீரங்கத்தை காவேரி நதி இரண்டு பிரிவாகப் பிரிந்து வளைந்து கொண்டிருப்பது போலவே இவ்வூரையும் காவேரி நதி இரண்டு பிரிவாகப் பிரிந்து வளைந்து கொண்டு இதை ஓர் தீவாக்கி இருக்கின்றது. இவ்விடமும் ஸ்ரீரங்கத்திலும், சிவசமுத்திரத்திலும் ஸ்ரீரங்கநாதர் பள்ளி கொண்டிருப்பது போலவே ஸ்ரீரங்கநாதஸ்வாமியானவர் அழகாக ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருப்பதைத் தரிசிக்க மிகவும் ஆனந்தமாகவிருக்கின்றது. இந்த க்ஷேத்திரத்தை பஸ்சிம ரங்கநாத க்ஷேத்திரமென்றும் அழைக்கிறார்கள் திருச்சிறாப்பள்ளிக் கடுத்த ஸ்ரீரங்கத்தைப்பூர்வ ரங்கநாதக்ஷேத்திரமென்றும் அழைக்கிறார்கள். இந்த ஊர் ஆதிரங்கமென்றும், சிவனசமுத்திரம் மத்ய ரங்கம் என்றும், ஸ்ரீரங்கம் அந்தியரங்கம் என்றும்கூறுகிறார்கள். ஸ்ரீரங்கநாதர் கோவிலின் உள்ப்ராகாரம் (அதாவது கற்பகுடியின் வெளிச்சுவர்) விமானத்தைப்போல் ஆகாரத்துடன் சித்திரங்களினாலும் செய்யப்பட்டிருக்கின்றது. இவ்வூரில் இன்னும் அநேக கோயில்கள் இருக்கின்றன. ஆனால் இக்கோயில்தான் முக்கியமானதும், பெரியதும். இந்த ஸ்வாமிக்கு ஜனவரியில் ரதஸப்தமி உத்ஸவம் என்று ஓர் உத்ஸவம் நடக்கின்றது. அப்பொழுது அவ்வுத்ஸவத்திற்காக சுமார் 20,000 ஜனங்கள் கூடுகின்றனர். அக்டோபர் அல்லது நவம்பரில் பிருந்தாவனோத்ஸவம் என்றொரு உத்ஸவமும் நடக்கின்றது. அப்பொழுது சுமார் 10,000 ஜனங்கள் சேர்கின்றனர். இவ்வுத்ஸவத்தன்று பிருந்தாவனத்தைப் போல் (துளசிமாடம்) ஒரு பல்லக்குக் கட்டி அதில் உத்ஸவரை இறுத்தி ஊர்வலம் செய்யும் காக்ஷி மிக்க நன்றாகவிருக்கும். ஸ்ரீ ரங்கநாயகி அம்மனுக்கு மைசூர் ராஜாவாலும் மற்றும் அநேக ஐச்வர்யவந்தர்களாலும் அளிக்கப்பட்ட அளவற்ற விலையுயர்ந்த நகைகளும், புடவை முதலியவைகளும் இருக்கின்றன.

ஸ்ரீரங்கப்பட்டணம் நீளத்தில் மேற்கிலிருந்து கிழக்குவரைக்கும் 3மைல் தூரமும் ஒரு மைல்தூரம் அகலமும் இருக்கின்றது. இவ்வூரைச் சுற்றிலும் டிப்பு சுல்தானால் கட்டப்பட்ட கோட்டை இன்னும் கொஞ்சம் இடிந்தும் இடியாமலும் இருக்கின்றது. கோட்டையைச் சுற்றிலும் அகழ் மட்டும் மூடப்பட்டிருக்கும். ஸ்ரீரங்கநாதஸ்வாமியின் கோவிலின் அருகில் முன் காலத்தில் மைசூர் ராஜாவின் அரண்மனை இருந்த இடம் அதுவென்று குறிப்பிடுவதற்காக ஓர் சிறிய கட்டிடம் கட்டி விட்டிருக்கிறார்கள். கோவிலிலிருந்து இரண்டு பர்லாங்கு சென்றால் அழகிய படிக்கட்டுகளினால் கூடியதாய் ஸ்நானம் செய்யவும், மற்றும் ஊர்வாசிகளின் உபயோகத்திற்கும் காவேரி நதிக்கரை இருக்கின்றது. இக்கோட்டைக்கு யானை வாயில், மைசூர் வாயில், இன்னும் சில கோட்டை வாயில்களிருக்கின்றன. மைசூர் வாயிலருகில் டிப்புவால் கட்டப்பட்ட இரண்டு உயரமான கோபுரங்களுடைய ஓர் மசூதிஇருக்கின்றது. இதில் ஏறிச்செல்லும்பொழுது சென்னைலைட் ஹவுஸில் ஏறுவது போல் கிருகிருத்து வருகிறது. அவைகளின் உச்சியிலிருந்து சுற்றிலும் அநேக தூரம் வரையிலிருக்கும் ப்ரதேசங்களைக் காணலாம். ஊரின் மேற்குப் புறத்தில் டிப்பு காலஞ் சென்ற இடம் இருக்கின்றது. கோவிலிற்கும் ரெயில்வே ஸ்டேஷனுக்கும் மத்தியிலிருக்கும் வழியில் வளைவாக பல வருஷங்களுக்கு முன் கட்டிய ஒரு பாலத்தைக் காணலாம். அதன் அகலம் சுமார் மூன்று அடிக்கு மேலிராது. அப்பாலம் வெறும் செங்கல்லினாலும் காரையினாலும் தான் செய்யப்பட்டிருக்கின்றது. அப்பாலத்தின் மத்திய பாகத்திற்கு மெள்ள வந்து நின்று கொண்டு அதின்மேல் குதித்தால் அக்காரையால் செய்யப்பட்ட பாலம் நன்றாக ஆடுவதை நாம் உணரலாம்.

தரியாதௌலத் பார்க்:— கோட்டையின் வெளிப்புறம் தரியாதௌலத்பார்க் "சமுத்திரத்தின் ஐஸ்வரியத் தினுடைய தோட்டம்" என்னும் தோட்டத்தில் டிப்புவால் கட்டப்பட்ட கோடை கால அரண்மனை ஒன்றிருக்கின்

ராபட் என்ற யந்திர விசையைப் பிலட்டாகக்கொண்டு தானாகப் பறக்கக் கூடிய விமானமொன்றை லெப்டினெண்டு கம்மான்டர் பிராங்கு ஹாக்ஸ் கண்டுபிடித்திருக்கிறார். இந்த விமானம் மணிக்கு 200 மைல் வேகம் வீதம் பறக்கும். பி. பி. ஏ.

றது. அந்த அரண்மனையின் சுவர்கள் நல்ல வர்ணங்களினல் சித்திரங்கள் எழுதி அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. அச் சித்திரங்களில் 1780-ம் வருஷம் காலனாரில் ஸல்லிகாஞ்சீவரத்தில் தோல்வி அடைந்ததும், ஹைதரும் டிப்புவும் ஊர்வலம் செல்லும் காக்ஷிகளும், அனேக ராஜாக்கள், பாளையக்காரர்களுடைய உருவங்களுடைய சித்திரங்களும் வரையப்பட்டிருக்கின்றன. ஸ்ரீரங்கப்பட்டணம் பிரிட்டிஷார்களின் வசமான பின் காலனாரில் வெல்லஸ்லீ அவ்வரண்மனையில் சில காலம் இருந்தார். சில காலத்திற்கப்பால் லார்ட் டல்ஹௌசி மைசூர் பக்கம் சுற்றுப் பிரயாணம் வந்தபொழுது அந்த அரண்மனையில் வரைந்திருக்கும் சித்திரங்கள் பழுதுபடியாமல் அச் சித்திரங்களை ஞாபகம் வைத்திருக்கும் ஓர் இந்தியச் சித்திரம் வரைபவனைக் கொண்டு, மறுபடியும் அவைகளைத் திருத்தி வர்ணம் அடிக்கச் சொன்னர். இப்பொழுது கூட அச்சித்திரங்கள் இப்பொழுது தான் எழுதினற்போல் பளபள வென்றிருக்கின்றன. இக் கட்டிடத்தைச் சுற்றிலும் புஷ்பம், காய், பழங்களுடன் கூடி செழிப்பாக வளர்க்கப்பட்ட தோட்டமொன்று இப்பொழுதும் இருந்து வருகிறது.

லால்பாக்:—இவ்வூரின் கிழக்குப் புறம் லால்பாக் என்று வழங்கும் தோட்டம் அல்லது கும்பஸ் என்று சொல்லப்படும் ஓர்இடம் இருக்கின்றது. இங்கு டிப்புவால் அவன் தந்தைக்காகக் கட்டப்பட்ட ஒரு சதுரமான கட்டிடம் இருக்கின்றது. இங்கு சுற்றிலும் பெரிய உருண்டையான கருங்கல் கம்பங்களால் தடுக்கப்பட்ட தாவாரத்துடன் ஓர் பெரிய ஹால் இருக்கின்றது. இதனுள்புறச்சுவர் முழுவதும் டிப்புவின் யுத்த ஆடையின் மாதிரி புலிப்பட்டைபோல் வர்ணம் அடிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஹாலில டிப்புவின் மற்றும் அவன் தாய், தந்தையரின் சவங்களைப் புதைத்து மூன்று சிறிய கோபுரம்போல் கட்டி இருக்கின்றனர். அவைகளின் மேல் விலையுயர்ந்த பட்டுகளைப் போர்த்தி இப்பவும் மஹமதியர்கள் நித்தியம் பூஜை செய்து வருகிருர்கள். டிப்புவின் சவம் புதைக்கப்பட்ட கோபுரத்தில் ஓர் சிறிய கல்லில் இவ்வாறு எழுதியிருக்கின்றது. "மகமதிய மதத்தின் விளக்கு இவ்வுலகை விட்டகன்றது. மஹமதின் மேல் பக்தியுள்ளவனுதலால் டிப்பு ஓர் பரோபகாரியானன். அவன் ஆயுதம் நழுவிப்போய் விட்டது. பரோபகாரியாகிய ஹைதரலியின் புதல்வனுனவன்."

இந்த ஹாலின் கதவுகளில் தந்தத்தினல் வேலை செய்யப்பட்டிருக்கின்றது. இந்த லால் பாகிலிருந்த டிப்புவின் அரண்மனை இப்பொழுது கொஞ்சம்கூட மிஞ்சி நிற்கவில்லை. ஆனல் புசேனம் என்பவர் 1800-ம் வருஷம் இவ்வாறு சொன்னாம். "மண்ணில் கட்டியதாகிலும் நான் பார்த்த கட்டிடங்களில் இக்கட்டிடம் மிகவும் சௌந்தர்யமானதாக இருக்கின்றது".

டௌலத்பாகின் கிழக்கில் சபீரணி திட்டு என்று வழங்கி வரும் இடத்தில் டிப்பு ஸுல்தானல் சில இங்கிலீஷ்காரர்களைச் சிறை பிடித்து வைக்கப்பட்டிருந்த இருட்டறை என்னும் ஓர் இடம் இருக்கின்றது.

மைசூரைப்பார்க்கச் செல்பவர்கள் ஸ்ரீரங்கப்பட்டணத்தைப்போய் பார்க்காமல் வருவது அபூர்வம்.

## விவசாயப்பகுதி.

(1579-ம் பக்கம் தொடர்ச்சி.)

கும். அதிக இனிப்பாய் இருக்கும். ஏகராவுக்கு சுமார் நான்கு வண்டி பச்சைத்தட்டு கிடைக்கும். இது மாடுகளுக்கு மிகவும் நல்ல உணவு.

பச்சையாய் உண்ண 'சுகர்கார்ன்' என்னும் சர்க்கரை மக்காச்சோள விதையை, பெங்களூர், பூன முதலிய இடங்களில் உள்ள விதை வியாபாரிகளிடமிருந்து தருவித்து விதைப்பதே அதிக இலாபகாமாயிருக்கும். சென்னை இராஜதானியில் இது சுமார் 130,000 ஏகராவில் பயிர் செய்யப்படுகிறது.

ஏகராவுக்குச் சுமார் 3 பட்டணம் பக்காபடி விதை (9 இராத்தல் எடை) வேண்டும். ஒரு இராத்தல் மக்காச் சோளத்தில் சுமார் 1500 விதைகள் இருக்கும். இதன் விதைகளை விதைத்தால் சுமார் நூறு விதைகளில் எண்பது விதைகள் முளைக்கும்.

# மகாபாரதம்

## விராட பர்வம்.

[பாண்டவர்கள் விராட நகரத்தில் அக்ஞாதவாஸமிருக்கையில் விராட ராஜன் மைத்துனன் கீசகன் ஸைரந்திரியாக உள்ள திரௌபதியைக் கண்டு மோகங்கொண்டு தன்னுடன் சேருமாறு நிர்ப்பந்திக்கிறான். அவள் ராஜ சபைக்கு ஓட அங்கும் சென்று காலால் உதைக்கிறான். திரௌபதி சபையைத் தூற்றிவிட்டு அந்தப்புரம் செல்லுகிறாள்.]

### கீசகவதம்.

திரௌபதி தன்னுடைய குறையை இச்சமயம் நீக்கக் கூடியவன் பீமனே என்று நினைத்து மடைப்பள்ளியில் தூங்கிக்கொண்டிருந்த பீமசேனனிடம் சென்று இரு கைகளாலும் அவனைத் தொட்டு எழுப்பினாள். பீமன் உடனே எழுந்து பாஞ்சாலியைத் தன் பக்கத்தில் உட்காரச் செய்து "நீ எதற்காக நடு இரவில் இங்கு வந்தாய்? நீ துக்கத்துடனும் களைப்புடனும் காணப்படும் காரணமென்ன? நீ எதை விரும்பினாலும் செய்து முடிக்கிறேன்; சீக்கிரம் சொல்" என்றான். திரௌபதி வெட்கத்துடன் பயந்து தலை குனிந்து கண்ணீர் வடிய மௌனமாகவிருந்தாள். பீமன் அவளைப் பிடித்துத் தைரியம் கூறி மீண்டும் வற்புறுத்திக் கேட்கப் பின்வருமாறு கூறினாள்:—

"யுதிஷ்டிரரைப் பர்த்தாவாகக் கொண்டவள் துக்கப்படாமல் எவ்வாறு இருக்க முடியும்? இதுவரையில் நான் அடைந்திருக்கும் கஷ்டங்களுக்கு அளவு ஏது? வேறு எந்த ராஜபுத்திரியும் இத்தனை துக்கங்களை அனுபவித்துக்கொண்டு ஜீவித்திருக்கமாட்டாள். என்னுடைய புருஷர்கள் ஜீவித்திருக்கும்போது நான் அன்னியஸ்திரீயை உபாஸித்து விராட ராஜனுக்குத் தினந்தோறும் வாசனைச் சந்தனத்தை அரைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். விராடராஜனுக்கு ஸேனாபதியும் அவனுக்கு மைத்துனனுமான கீசகன் கெட்ட புத்திகொண்டு ஸைரந்திரி வேஷத்தோடு அந்தப் புரத்தில் வசிக்கும் என்னைத் தினம் அணுகித்தனக்குமனைவியாகி விடுமாறு வற்புறுத்துகிறான். அந்தக் கீசகன் இரவு விடிந்து காலையில் உதிக்கின்ற சூர்யனைப் பார்ப்பனாயின் நான்ஜீவித்திருக்கமாட்டேன். யுதிஷ்டிரரின் கெட்ட சூதாட்டத்தினால் தானே இத்தனையும் நேர்ந்தது. நாம் முன்னிருந்த நிலைமை என்ன? இப்போதுள்ள நிலைமை யென்ன? சிறந்த ரிஷிகளால் சபையில் உபாஸிக்கப்பட்ட யுதிஷ்டிரர் இப்போது வேறொருவனை உபாஸிக்கிறார். விராட ராஜனுடைய அரண்மனையில் சுதேஷ்ணை பார்த்துக்களிக்க நீர் புலிகளோடும் எருமைக் கடாக்களோடும் யானைகளோடும் யுத்தஞ் செய்கிறீர். எல்லாத் தேவர்களையும் மனிதர்களையும் ஜெயித்தவரும் யௌவன முடையவருமான அர்ஜுனர் நபும்ஸக வேஷத்தால் மறைந்துகொண்டு கிணற்றிலுள்ள நெருப்புப்போல் கன்னிகைகளுக்கு நர்த்தனம் கற்பிக்கின்றவராகவிருக்கிறார். எப்போதும் ரூபம் அஸ்த்ரம, மேதை மூன்றையுமுடைய நகுலர் விராடனுடைய குதிரைகளைக் கட்டுகிறார். யுத்தஞ் செய்கிறவர்களுள் உத்தமரும் இளையவருமான ஸஹதேவர் பசுக்களிடங்களில் இடையன் வேலை பார்த்துக் கன்றின் தோலிலும் பூமியிலும் படுக்கிறார். நீங்கள் ஜீவித்துக்கொண்டிருக்கும்போதே பல துக்கங்களும் என் சரீரத்தை வறளும்படிச் செய்கின்றன. ஒரு பர்த்தாவுடைய ஸ்திரீ சுகமாகவேயிருக்கிறாள். எனக்கு ஐந்து கணவர்களிருக்கிறார்கள். இருந்தும் என்னுடைய துயரம் முடிவற்றதாயிருக்கிறது. சூதாடிய யுதிஷ்டிரர் நிமித்தம் நான் ஸைரந்தரி வேஷத்தோடு அந்தப்புரத்தில் சுதேஷ்ணைக்கு வசப்பட்டிருக்கிறேன். சந்தனம் முதலானவற்றை ஒரு காலமும் அரைத்திராத நான் இப்போது ஸுதேஷ்ணைக்குச் சந்தனத்தை அரைத்துக் கொண்டிருக்கிறேன். என் கைகளில் தழும்பேறிவிட்டது. கீசகனை நீர் கொல்லாவிட்டால் நான் எப்படியாவது உயிரை விட்டுவிடுவேன்" என்று கூறிப் பீமசேனின் மார்பைத் தழுவிக்கொண்டு அழுதாள்.

பீமஸேனன் திரௌபதியைத் தேற்றிவிட்டு "ஸபையில் கீசகன் உன்னை உதைத்ததைப்பார்த்து நான் மத்ஸ்ய தேசத்தார்களுக்குப் பெரிய நாசத்தைச் செய்ய உத்தேசித்து, ஒரு மரத்தை உற்றுப் பார்த்தேன். அப்போது தர்மராஜர் என்னைக் கடைக்கண்ணால் தடுத்தார். நான் தலை குனிந்து மடைப்பள்ளி வந்து சேர்ந்தேன். பூமியில் ஸத்யம் நம்மால் காப்பாற்றத் தக்கது. நாங்கள் மனத்தேறுதலை யடையும்போது நீயும் தேறுதலை யடைவாய். யுதிஷ்டிரர் உன்னிடமிருந்து இப்படிப்பட்ட நிந்தையைக் கேட்பாரானால் உயிரை யிழப்பார். தனஞ்சயனாவது நகுல ஸஹ தேவர்களாவது கேட்பார்களானால் அவர்களும் உயிரை யிழப்பார்கள். வைதேகி என்ற ஸீதை பெரிய காட்டில் தன் கணவரைப்பின் தொடர்ந்து சென்றாள். அவள் ராவணனால் அபஹரிக்கப்பட்டு ராக்ஷஸர்களால் பயமுறுத்தப்பட்ட போதிலும் மிகுந்த துயரத்தை அனுபவித்துக்கொண்டு ராமரையே அனுஸரித்திருந்தாள். அவ்வாறே இன்னும் பலபதிவ்ரதைகள் தங்கள் கணவர்களையே அனுஸரித்திருக்கின்றனர். கோபத்தை விட்டுவிடு. நீ வெகுகாலம் பொறுக்க வேண்டியதில்லை. முப்பது நாள் மாத்திரம் பொறுத்துக் கொள். நம்முடையபிரதிக்ஞை நிறைவேறியதும் நீ பெரிய போகங்களை அடையப் போகிறாய்" என்று தேறுதல் கூறினான்.

திரௌபதி "ஸூதபுத்ரனை கீசகன் என்னை அநாதையென்று எண்ணிக்கொண்டு தினந்தோறும் தனக்கு மனைவியாகுமாறு கூறுவது எனக்கு ஸகிக்கமுடியாத துக்கத்தையுண்டுபண்ணுகிறது. நான் கீசகனிடம் "நான் ஐந்து கந்தர்வர்களின் பார்யை. ஒருவராலும் ஜெயிக்கமுடியாத அந்தச் சூரர்கள் உன்னைக்கொன்றுவிடுவார்கள்" என்று கூறினேன். அதற்கவன் ஆயிரம் கந்தர்வர்களையும் நான் கொல்வேன். நீ எனக்குச் சந்தோஷத்தையுண்டுபண்ணு" என்று பதில் கூறிவிட்டான். கீசகனால் ஹிம்ஸிக்கப்பட்டு நான் உயிர் விடுவேனாகில் தர்மத்தில் முயற்சி செய்துகொண்டிருக்கிற உங்களுடைய பெரியதர்மமே அழிந்து விடும். க்ஷத்திரியர்களுக்குத் திருடர்களைக் கொல்வதை விட வேறு தர்மம் இல்லை. என்னை அவமதிக்கிற இந்தப் பாபியை நீர் ஸம்ஹாரம் செய்யும்" என்று கூறிப் பீமன் மார்பில் சாய்ந்து அழுதாள். பீமனும் அவளைக் கட்டியணைத்து, நல்ல வார்த்தை சொல்லி ஸமாதானம் செய்து விட்டு, "நீசொல்லுகிறபடியே செய்கிறேன். கீசகனை இப்பொழுதே கொல்லுகிறேன். நாளைக்காலையில் கீசகனைச்சந்தித்துஇரவில் அவனுடன் சேருவதாக ஸங்கேதம் செய். நடனசாலையில் பகலில் நர்த்தனம் செய்யும் கன்னிகைகள் இரவில் வீடுகளுக்குப் போய்விடுகிறார்கள். அந்த நடன சாலையில் உறுதியான கட்டில் ஒன்று இருக்கிறது. கீசகனை அங்குவருமாறு செய். நான் அவனை ஒழித்து விடுகிறேன்" என்று கூறினான்.

பிறகு திரௌபதி அந்தப்



சீர்காழித் தாலுக்கா போர்டு மெம்பர் ஸ்ரீமான் டி. ஆர். எம். சிதம்பரம் செட்டியாருக்கு வைத்தீசுவரன் கோவில் மயிலவன் சகைத்தார் உபசாரம் நடத்திய போது எடுத்த படம்.

புரத்திற்குத் திரும்பிச் சென்றாள். மறுநாள் காலையில் கீசகன் அரசனுடைய அரண்மனைக்குச் சென்று திரௌபதியை அணுகி "ஸைரந்திரி! அரசன் எதிரிலேயே நான் உன்னை உதைத்ததைத் தடுக்க எவரும் முன் வரவில்லை. விராடராஜன் பெயருக்கே அரசன். நான்தான் உண்மையான அரசன். உனக்குவேண்டியவைகள் அனைத்தையும் கொடுக்கிறேன். நீ என்னுடன் சேரவேண்டும்" என்றான். உடனே திரௌபதி "நீ என்னுடன் சேருவதை வேறு எவரும் அறியக்கூடாது. என்னுடைய புருஷர்களான கந்தர்வர்களுக்குத் தெரிந்தால் பெரிய அனர்த்தம் விளையும். ஆகையால் நீ இதை யேற்பதாகப் பிரமாணம் செய்தால் நான் உனக்கு இணங்குவேன்" என்றாள். கீசகன் "நான் ஒருவனாகவே உன்னுடைய கிருகத்திற்கு வருகிறேன்" என்று பதில் கூறினான். அதற்குத் திரௌபதி "அரசனால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் நடனசாலையில் இரவில் ஒருவரும் இருப்பதில்லை. தனியாக நீ இரவில்அங்குவந்துசேர். நான் வந்து உன்னை அடைவேன்" என்றாள். கீசகன் "நீ கந்தர்வர்களுக்குப் பயப்படவேண்டியதில்லை. நான் என்னை அலங்கரித்துக்கொண்டு ரகஸ்யமாகத் தனியாக அங்கு வந்து உன்னை அடைகிறேன்" என்றான். பிறகு இருவரும் பிரிந்தனர்.

திரௌபதி மடைப்பள்ளிக்குச் சென்று நடனசாலையில் இரவில் கீசகனைச் சந்திப்பதாக அவனுடன் ரகஸ்யமாகச் சங்கேதமேற்படுத்திக்கொண்டதைப் பீமசேனனிடம் அறிவித்தாள். கீசகனை அன்று தான் கொன்று விடுவதாகப் பீமன் சபதம் செய்தான். திரௌபதி இந்தக் காரியம் ஒருவருக்கும் தெரியாமல் நடக்க வேண்டுமென்றும் கௌரவர்கள் இதை யறிந்தால் மீண்டும் பாண்டவர்கள் கானகம் செல்லவேண்டி நேருமென்றும் கூறினாள்.

அன்றிரவு நடுநிசியில் பீமஸேனன் வெண்மையான ஒரு மெல்லிய பட்டு வஸ்திரத்தை யணிந்துகொண்டு திரௌபதி பின் தொடர நடனசாலையை அடைந்தான். முன்னதாகவே சென்ற பீமன் கட்டிலின்மீது உட்கார்ந்துகொண்டு கீசகன் வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தான். கீசகன் ஸ்நானம் செய்து தன்னை நன்றாக அலங்காரம் செய்துகொண்டு தனிமையாக நடனசாலைக்குள் சென்றான். காமத்தினால் மதிமயக்கமுற்றிருந்த கீசகன் கட்டிலை யணுகி ஸைரந்திரி யென்று நினைத்த பீமனைக் கையினால் தொட்டு அவளைப் புகழ்ந்து தன்னுடன் சேருமாறு அழைத்தான். பீமன் உடனே "ஸூதபுத்ர! இப்படிப்பட்ட பெண்ணை இதற்குமுன் நீ ஒருபோதும் பார்த்திருக்கமாட்டாய். இப்படிப்பட்ட ஸ்பர்சமானது இதற்குமுன் உனக்கு ஏற்பட்டிராது" என்று கூறினான். பிறகு விரைவாக எழுந்து அட்டஹாஸம் செய்து கீசகனுடைய தலை மயிரைப்பற்றி இழுத்தான். கீசகன் தன் மயிர்களை விடுவித்துக் கொண்டு பீமஸேனனுடைய கைகளைப் பிடித்தான். பிறகு இருவரும் மதம் பிடித்த இரண்டு ஆண் யானைகளைப்போல் சண்டை போட்டனர். இருவரும் கீழே விழுந்தார்கள். அவர்கள் சண்டை போட்ட வேகத்தில் நடனசாலையே நடுக்க முற்றது. வரவரக் கீசகனால் பீமஸேனனின் வேகத்தைத் தாங்கமுடியவில்லை. இதையறிந்த பீமஸேனன் கீசகனை மார்பில் வேகமாக அடித்தான். பல தடவை அடிப்பட்டுக் கீசகன் தலைசுழன்று கண் சிவந்து உயிரை யிழந்து பூமியில் விழுந்தான். பிறகு பீமன் கீசகனின் அங்கங்களை யெல்லாம் நசுக்கி முகம், கைகள் கால்கள் முதலியவை எல்லாம் அவனுடைய உடலில் புகுமாறு செய்தான். அப்போது கீசன் ஒரு மாம்ஸ பிண்டமாக ஆகிவிட்டான். பிறகு பீமன் திரௌபதியை அழைத்துக் கீசகன் இறந்து கிடப்பதைக் காண்பித்து "உன்னை ஹிம்ஸிப்பவர்கள் இந்தக் கதிக்கே ஆளாவார்கள்" என்று கூறினான். பிறகு அவன் மடைப்பள்ளிக்குச் சென்று ஸ்நானம் செய்து விட்டுப் படுத்துக்கொண்டான்.

உப கீசகர்கள் வதம்.

திரௌபதி பயம் நீங்கிக் காவற்காரர்களை அழைத்து "என்னுடைய கணவர்களான கந்தர்வர்கள் கீசகனைக்கொன்றுவிட்டனர். பிறர் மனைவியை அடைய முயன்ற கீசகனின் கதியைப் பாருங்கள்" என்று கூறினாள். பிறகு பலரும் அங்கு வந்து சேர்ந்தனர். கீசகனுடைய ஸகோதரர்களும் அங்கு வந்தனர். கை கால் தலையின்றி முண்டமாகப் பிரேதம் கிடப்பதைக் கண்டு அனைவரும் ஆச்சரியமடைந்தனர். கீசகனுடைய பந்துக்கள் அனைவரும் வந்து புலம்பினார்கள். கீசகனின் பிரேதத்தைத் தகனத்திற்குக் கொண்டுபோக ஏற்பாடு செய்தனர். உபகீசகர்களில் ஒருவன் திரௌபதியை அங்கு கண்டதும் "எவள் நிமித்தமாகக் கீசகன் கொல்லப்பட்டானோ அவளை அவனுடனேயே வைத்துக் கொளுத்துவோம், கீசகனுக்குப் பிரியமானதை அவன் இறந்த பிறகாவது செய்வோம்" என்றான். பிறகு ஸூதர்கள் விராடராஜனிடம் சென்று ஸைரந்திரியைச் சேர்ந்த கந்தர்வர்களால் கீசகன் கொல்லப்பட்டிருப்பதால் அவளை அவனோடுகூடவே எரிக்கப் போவதாக அறிவித்தனர். அரசனும் அதற்கு அனுமதி கொடுத்தான். பிறகு உபகீசகர்கள் கிருஷ்ணையை கீசகனோடு சேர்த்துக்கட்டி இவளும் கீசகனோடு ஸ்வர்க்கம் போகட்டுமென்று கூறினார்கள். பிணத்தோடு சேர்த்துக்கட்டப்பட்ட திரௌபதி ஆஸந்தியில் தொங்கிக் கொண்டுஅழுதாள். பலாத்காரமாக அவள் துஷ்டர்களால் ஸ்மசானத்துக்குக் கொண்டு போகப்பட்டாள். அவள் தன் கணவர்களைப் பிரார்த்தித்து உரக்கக் கத்தினாள். அவளுடைய புலம்பலைக் கேட்ட பீமன் உடனே படுக்கையிலிருந்து எழுந்து ஸைரந்திரியை ஸூத புத்ரர்களிடமிருந்து காப்பாற்றுவதாகக் கூறிவிட்டு உப கீசகர்களைக் கொல்லுவதற்கு வஸ்திரத்தை யிழுத்துக் கட்டிக்கொண்டு வெளியில் வந்தான். பல மதில்களைத் தாண்டிச் சுடுகாட்டை யடைந்தான். சிதையின் அருகில் சென்றதும் ஒரு பெரிய மரத்தை வேரோடு பிடுங்கிக் கொண்டு உயரத்தில் தூக்கி ஆட்டிக்கொண்டே உபகீசகர்கள் முன் போய் நின்றான். சிங்கத்தைப் போல் கர்ஜித்த அவனைக் கண்டு உபகீசகர்கள் நடுங்கினார்கள். உடனே ஸைரந்தரியை அவிழ்த்துவிட்டு உயிர்தப்புவோமென்று பேசிக் கொண்டார்கள். ஆனால் பீமஸேனன் மரத்தைச் சுழற்றுவதைக்கண்டு நடுக்கமடைந்து நகரத்தை நோக்கி ஓடினார்கள். பீமஸேனன் தாண்டிச் சென்று அவர்களுக்கு முன்னால் வழி மறித்து நின்றான். பிறகு அந்த மரத்தால் ஒவ்வொரு அடிக்கும் பத்துப் பேர்களுக்குமேல் கொன்றான். இவ்வாறு 105 உபகீசகர்களையும் வதம் செய்தபின் பீமஸேனன் திரௌபதியை அவிழ்த்துவிட்டுத் தேறுதல் கூறினான்.

தேவராதருடைய மனைவி சிரோமணியை ஒரு ராக்ஷஸன் அவளுடைய புருஷனைப்போல் வேஷந்தரித்து அபகரித்துச் சென்று ஒரு குளக்கரையில் இறக்கிவிட்டுச் சுயரூபத்துடன் தோன்றி அவளை நிர்ப்பந்தம் செய்ததில் அவள் சிறிதும் இணங்காததால் ராக்ஷஸன் கத்தியை எடுத்து வெட்டுவதாகப் பயமுறுத்தினான். உடனே அவள், தன் சரீரத்தின் சிலபாகங்கள் சற்பாறையாகட்டுமென்று பிரார்த்திக்க அப்படியே நாபிக்கும் முழங்காலுக்கு மிடையிலுள்ள பாகம் கல்லாகிவிட்டது. ராக்ஷஸன் அவள் தலையை வெட்டினான். பின்னர் அவள் பார்வதியின் இணைபிரியாத ஸகியான ஜயை என்பவளானாள். பீமன் இந்தக்கதையைக் கூறித் திரௌபதிக்குத் தைரியம் வருமாறு செய்து கற்புடைய ஸ்திரீகள் எதற்கும் பயப்படவேண்டியதில்லை என்று தெரிவித்தான். பிறகு திரௌபதி அந்தப் புரத்திற்கும் பீமசேனன் மடைப் பள்ளிக்கும் தனித் தனியாகச் சென்றனர். கந்தர்வர்களின் சக்திக்குப் பயந்து கீசகர்களின் உறவினர்கள் ஸைரந்திரியை நேரில் பார்க்கவும் பயந்தனர்.

(தொடரும்.)

# ஸ்ரீ ஆண்டாள்

—

(ஸ்ரீமான் மயிலை தி. ராமஸ்வாமி அய்யங்கார் எழுதியது.)

"மாதங்களுள் யான் மார்கழி" என்று மாதவனே மனமுவந்த இம் மாதத்தை மேலும் மதிப்புறச் செய்வது இதற்கு ஸ்ரீ ஆண்டாளுடன் ஏற்பட்ட சமபந்தமே, "மார்கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாளென்று போற்றியதும் ஸ்ரீ ஆண்டாளே. கோதை பிறந்த ஊர் என்று கொண்டாடப்படும் ஸ்ரீவில்லிபுத்தூரில் அவ்வூர் எம்பெருமானாகிய வடபெருங் கோயிலுடையானுக்குத் துழாய் மாலைப்பணியடிமை செய்து வந்த அந்தணராய ஸ்ரீ பெரியாழ்வாருக்குத் திருத்துழாய்ப் பாத்தியிலே அயோனிஜையாய்த் தோற்றியருளினர் ஆண்டாள். தம்மை வாழ்விக்கவே தமக்கு இம்மகவை இறைவன் காட்டியருளினன் என்று மனமகிழ்ந்த அப்பெரியாரும் அதனை தம்மில்லாளிடம் தந்து, இருவருமாய் அம்மகளுக்கு "கோதை" எனப் பெயரீந்து கண்ணினைக்காக்கும் இமை போல் காத்து வந்தனர் கோதையும் கோதில் குணத்தினளாகிச் சிறு பிராயம் தொட்டே சுந்தர காற்றோள் முன்னீர் வண்ணனிடத்துச் சித்தத்தை அர்ப்பணம் செய்து நின்றாள். உலகோர்கள் இன்றளவும் விஷ்ணு சித்தர் என்று விசேஷித்துக் கூறும்படி பகவத் பக்தியில் சிறந்த பாகவதோத்தமரைத் தகப்பனாகப்பெற்றமையால் எப்பொழுதும் அவர் திருமாளிகையில் நிகழும் ஸ்ரீயப்பதி விஷயமான கானமும் த்யானமும் ஆண்டாள் செவியின் வழி புகுந்து உள்ளத்தை உருக்கியது. அதனால் அறியாக் காலந் தொடங்கி ஆழியானுடைய அடிமைக்கே அன்பு செய்யத் துவக்கியது ஆண்டாள் உள்ளம். வாயிற் பல்லு மெழாது, மயிரும் முடி கூடாது நாவால் மெள்ள மழலை மிழற்றக் கற்றபோதே கேசவாவென்றும் கேடிலீயென்றும் இஞ்சுகவாய் மொழிகளைக் கொட்டிக் குதுகலிப்பாள். அம்மாதிரி பகவந் நாமங்களை முதிராதவின் சொற்களால் தன் கூட்டிலிருக்கும் கிளிக்குக் கற்பித்துக் கொடுத்து அது கோவிந்தா கோவிந்தா என்று பேசக் கேட்டுப் போனந்தத்தால் அம்மடக் கிளியைக் கைகூப்பி வணங்குவாள். சிறிது காலங் கடந்து தன் தோழிமார்களுடன் வெள்ளை நுண்மணற் கொண்டு கோலங்கள் போடுங் காலையில் சங்கு சக்காம் தண்டு வில் வாள் என்றிவைகளையே இழைப்பாள். இவ்வதிசயங்களை யெல்லாம் கண்ட விஷ்ணு சித்தர் இப்படிப் "பேராளன் பேரோதும் பெண்ணை மண்மேல் பெருந்தவத்தளென்றல்லாற் பேசலாமே" என்கிற படியும் கண்ணபுரம் தொழும் பிள்ளையைப் பிள்ளை யென்றெண்ணப் பெறுவரே?" என்கிறபடியும் இது ஏதோ ஒரு அவதார விசேஷம் என்றே மதித்திருந்தார்.

ஆழ்வார் தினமும் நாட்காலே நீராடி நந்தவனம் சென்று திருத்துழாய்களையும் புஷ்பங்களையும் சேகரித்து வீடுவந்து அத்துழாய் மலர்களைச் செவ்வனே தொடுத்து, தன்னில்லத்திற் பொலிந்து நிற்கும் சாளக்கிராம ரூபமான எம்பெருமானுக்குத் திருவாராதானம் செய்வித்துப் பின்னர் தாம் கட்டிய மாலைகளுடன் திருக்கோயில் சென்று அங்கே சயனித்திருக்கும் வடபத்ரசாயியை அடிபணிந்து தப்புஷ்ப மாலைகளை ஸமர்ப்பித்து வைப்பது வழக்கம். கோயிலுக்குப் போகும் பொழுது கோதையும் கூடப் போவதுண்டு. அதற்குமுன்பே தன் மனத்தை அவ்வெம்பெருமான் கவர்ந்தது போல் அவன் மனதைத்தான் கவா வெண்ணி அதற்காகத் தன்னை நன்கு அலங்கரித்துக் கொள்ளவேண்டி "காறைபூணும் கண்ணாடிகாணும், தன் கையில் வளைகுலுக்கும், கூறையுடுக்கும், கோவைச்செவ்வாய் திருத்தும்" என்பது போல் பல படியாய் அழகினுக்கு அழகு செய்யும் ஆடையாபரணங்கள் பூண்டத தன்பின் முடியிற் சூட்ட புஷ்பம் தேடி, பெருமாளுக்கென்று கட்டி வைத்த புஷ்பத்தைத் தான் சூடிப்பார்த்து, இத்தகைய திருமேனியை அவனுக்கென்றே சங்கற்பித்தேன் என்று தன் மனோரதத்தை ஒரு முறை வாய் விட்டுச் சொல்லும், "உன்ன தென்னதாவியும் உன்ன தென்னதாவியும் ஆதலின் நீ சூடி யான் சூடினாலென், யான் சூடி நீ சூடினாலென் உன் திருவுள்ளங் கலங்குமோ" வென்று தான் செய்த காரியத்தைக் குறித்துத் தன் மனதைத் தேற்றிக் கொள்ளும். ஆயினும் இதை யறிந்தால் தந்தை யென் சொல்லுமோ என்று எண்ணி அவர் அறியாது அம்மாலையை முன்போல் வைத்து, கோயிலுக்குச் செல்லும் சமயத்தை எதிர் பார்த்த வண்ணம் காத்திருக்கும் ஆழ்வாரும் ஒன்று மறியாதாராகையால் வழக்கம்போல் கோயிலுக்கு மாலைகளை ஸமர்ப்பித்துக்கொண்டே வந்தார்.

சின்னாள் இங்ஙனம் நிகழ்ந்த பின்னர் ஒரு வேளையில் ஆண்டாள் பெருமாள் சூடவேண்டிய மாலையைத் தான் சூடிக் கண்ணாடி முன்பு மெய் மறந்துத் தன்னை எம்பெருமானுக்கு அர்ப்பணம் செய்து நின்ற காலையில், ஆழ்வார் நேரே கண்டு விட்டார். உடனே பெண்ணின் பேதமையால் தமக்குப் பகதி தபசாரம் நேரிட்டுவிட்டது என்று நினைத்து நடுங்கி, "தொடுத்த துழாய் மலர் அவன் சூடிக் களைந்தன சூடும் தொண்டர்களோம் குலத்திற் பிறந்த உனக்கு இப்படி அவன் சூடுமுன்னர் சூடும் விபரீத புத்தி எங்ஙனே ஸம்பவித்தது? இத்துராசாரத்தை இனி விடு" என்று வருந்திப் பேசினார். ஆண்டாளும் "அறியாமற் சிறியேன் பிழைத்தனன், பொருத்தருள்க" என்று இறைஞ்சினாள். பெரியாழ்வாரும் அம்மாலையை ஆண்டவனுக்காகாதென்று ஒதுக்கிப் புதியதோர் மாலை தயாரித்துப் பெருமாளுக்குச் சாற்றினார். பெருமாள் மட்டும் அன்று மாலையை வழக்கம்போல் அங்கீகரியாதவர்போல் தென்பட்டார். அம்மாலை திருத்தோள்களினின்றும் நழுவினமை கண்டு அர்ச்சகர் திருத்தியும் அது மறுபடியும் நழுவியது. என்றுமில்லாமல் இம்மாதிரி ஸம்பவித்தது அன்று நேர்ந்த அபசாரத்தால்தான் என்று மனம் வாடி ஆழ்வார் கோயில் விட்டுத் தமதில்லம் சேர்ந்தார். ஆனால் அன்றிரவில் ஆழ்வாருடைய கனவில் வட, பெருங் கோயிலுடையான் தோன்றி "நீர் நமக்குக் கட்டி ஸமர்ப்பிக்கும் மாலைகளை இனி உமது இளங் குமரியாம் கோதை சூடிய பிறகே எமக்குச் சூட்டவேண்டும் காணீர். இத்தனை நாட்களாய் யாம் அடைந்த அனுபவத்தை இன்றைய திருமாலையில் அடையப் பெற்றிலோம். அதற்குக் காரணம் நீர் நமக்குச் சூடிக்கொடுக்கும் நாச்சியார் சூடிய மாலையைப் புறக்கணித்து புதுமாலை கொணர்ந்தமைதான். இனி



(கானாடுகாத்தான்) லெக்ஷிமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலை ஐந்தாம் ஆண்டுவிழாவின்போது "மனோகரன்" நாடகத்தை நடித்த மாணவர்களும் மாணவிகளும்.

அவள் சூடாத மாலையை நாமும் சூடோம்'' என்று அருளிச் செய்தார். உடனே ஆழ்வார் நித்திரை நீத்து மெய் சிலிர்ப்ப மிகவும் உயர்ந்த ஆச்சரியக் கடலில் ஆழ்ந்தார். "வேரிமாருப் பூமேலிருக்கும் திருமங்கையின் உயர்பரிமளம் திருமார்பிலும், சராசரங்களை யெல்லாம் படைக்கவல்ல சதுர் முகனைப் பயக்கும் கமலத்தின் வாசனை திருக்கொப்பூழிலும், அதிமனோஹரமான வேதங்களின் மணம் திருவடிகளிலும் கமழு நாதன் நமது பூங்கொடி சூடிய மலரின் மணத்தைத் தலையால் ஏற்கிறானென்றால் இவ்விளங்குமரியின் ப்ரபாவம் தான் என்னே? பிள்ளை கொல்? நிலமாமகள் கொல் அன்றி திருமகளே தான் கொல்?'' என்று நெடுநேரம் ஆழ்வார் கண்களில் ஆனந்த பாஷ்பம் சொரிய எம்பெருமானுடைய பரம க்ருபையைக் குறித்து உளம் உருகி நினைந்து பின்பு கோதை கண்வளருமிடம் சென்று "என்னை ஆண்டளிக்கும் அருள்வடிவே என்று அன்பாய் மார்போடணைந்து உச்சி முகந்தார். அன்று முதல் கோதை யென்னும் நாமத்தைப் பார்க்கிலும் "ஆண்டாள்'' என்னும் திருநாமமே அதிகமாய் வழங்கிவருகிறது.

இச்செய்தியைக் கேட்ட ஆண்டாள் "எம்பெருமான் இப்படியும் அடியேனுக்கு அனுக்ரஹித்துள்ளானா?'' என்று உளம் பூரித்தாள். திருமால் திருமார்பில் மினுங்க நின்று விளையாடும் மங்கல நன்வன மாலைக்கு அடியனேன் சங்கும் மனமும் நிறைவுமெல்லாம் தோற்றுநிற்க இச்சிறியேன் முடியில் தரித்த மாலையை அவன் விரும்பி என்னை வாழ்விக்க மனமுவந்தானோ? என்னே அவன் கருணை!'' என்று பலவாறாய் தன்னுள்ளே களித்தாள். இத்தகைய அருள்வள்ளலே எனக்குப் பதியாய் நேரவேண்டும் என்று மனோரதித்தாள். பின்பு விஷ்ணுபக்தியில் சிறந்த ஆழ்வார் பாடிய பாசுரங்களை மனமுருகப்பாடுவாள். சிற்சில சமயங்களில் தன்னை மறந்து நெஞ்சுருகிக் கண் பனிப்ப நிற்பாள். சில வேளைகளில் அரங்கமென்றும் வேங்கடமென்றும் எம்பெருமானுகந்த திருப்பதிகள் பேர் சொல்லி வாய்வெருவுவாள். இவளது இந்த நிலையைப் பெரியாழ்வார் தமது திருமொழியில் மூன்றாம் பத்து ஏழாந் திருமொழியான "ஐயபுழுதி'' என்னும் பத்துப் பாட்டில் நன்கு விவரித்துப் பேசுகிறார். தனக்கு மணம் செய்விக்கும் பேச்சு யாரேனும் பேசுவது இவள் செவிப்பட்டால் உடனே அவ்விடம் சென்று "அவரைப் பிராயந் தொட்டு துவரைப் பிரானுக்கே சங்கற்பிக்கப்பட்ட என்னை மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டீர்'' என்று தன் உறுதியை அவர்களுக்கு வெளியிடுவாள். ஏகாந்தத்தில் போய் மணிவண்ணனுக்கு மாலையிடும் பாக்கியம் தனக்கு நேரிடுமோ வென்று நினைந்து "மாதவன் ஓட்டரா வந்து என் கைபற்றித் தன்னோடும் கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே'' என்று கூடலிழைப்பாள். (கூடலிழைத்தலாவது தன் மனோரதம் நிறைவேறுமா வென்றறிய கண்ணை மூடிக்கொண்டு வட்டமாய் ஒரு கோடு போடுவது. அது சரியாய்க் கூடினால் நிறைவேறுமென்றும் கூடாவிடில் நிறைவேறாதென்றும் நினைத்துக் கொள்வது) அதுவுமன்றி மன்மதனுக்காக நோன்பு நோற்று "கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்கொண்டு கடல் வண்ணனென்பதோர் பேரெழுதிப் புள்ளினை வாய் பிளந்தானென்பதோர் இலக்கினில் புக வென்னை விதிக்கிற்றியே என்று ப்ரார்த்தனை செய்து நிற்பள். அல்லும்பகலும் இதே எண்ணமான படியால் ஊண் மறந்து உறக்கம் விட்டொழிந்தாள் அன்றி சற்று உறங்கினும் கனவின்கண் தான் தன்னின்னுயிர்க் காதலனாகிய கண்ணனையே மணம் புரிவதாகக் கண்டு தன் தோழியைக் கூவி "மதுசூதன் வந்தென்னைக் கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ நான்'' என்று தன் கனவனைத்தையும் அவளுக்கு நிகழ்த்துவள்.

இதையெல்லாம் நன்கறிந்த பெரியாழ்வார் அவளைக் கூவி மடியிலிருத்தி "கண்ணே எவ்வூர் எம்பெருமானை மணம் புரிய ஆவல் பூண்டுள்ளாய்'' என்று வினவுவர். நாணத்தால் முகம் சிவந்து ஆண்டாளும் தரை நோக்கியவண்ணம் தலை குனிந்து "அவ்வவ்வூர் பெருமான்களை வர்ணித்துச் சொன்னக்கால் எவருக்கு என் மனம் தாழ்கின்றது என்று கூறவல்லேன்'' என்று மெது வாய்ச் சொற்றாள். உடனே ஆழ்வாரும் அரங்கத்தமலன் வேங்கடத்து வித்தகன், குடந்தை யென் கோவலன், மாலிருஞ்சோலை மணாளன், திருக்கோட்டியூர் வளர் செல்வன் முதலிய உகந்தருளிய திருப்பதிகளில் விளங்கும் எம்பெருமான்களைத் தனித்தனியே புகழ்ந்து பேசினார். அப்படியே "மீனோடாமை கேழலரி குறள்'' என்று தொடங்கும் அவதார விசேஷங்களையும் விவரமாய் எடுத்துக் கூறினார். உள்ளம் உவகை பூப்ப அவர்களின் மொழிகளையுண்ட ஆண்டாள் இறுதியில் அவதாரங்களுள் கண்ணன் விஷயத்திலும் அர்ச்சைகளுள் அரங்கன் விஷயத்திலும் தன் மனம் விசேஷ நாட்டம் அடைந்து நின்றதை வெளியிட்டாள்.

ஆழ்வாரும் "உனக்கும் எனக்கும் பாக்கியமிருந்தால் திருவரங்கச் செல்வனே உன்னை மணம்புரிய மனமுவக்க வேண்டும். கருணைக் கடலான அவ்வள்ளல் நினைந்தால் எதுதான் நடந்தேறாது'' என்று தேற்றரவு செய்தார்.

பெரியாழ்வார் க்ருஷ்ணாவதாரத்தின் இளம்பருவத்திலீடுபட்டுப் பாடிய பாசுரங்களை அடிக்கடி பயின்றவளாதலின் ஆண்டாள் க்ருஷ்ணனிடத்து அடங்காத காதல் பூண்டவளானாள். தன்னை ஒரு கோபிகை (இடைச்சி) யாகவும் ஸ்ரீவில்லிபுத்தூராகிய தனதூரைக் கோகுலமாகவும் கருதி எப்பொழுதும் அவ்வீதிகள் வாய் கண்ணன் காலிப் பின்னே திரிவதாகவே அவள் கருத்து. இந்த மனோபாவத்தை த்ருடமாக்கி, மெள்ள அதிகரித்ததுதான் திருப்பாவை என்னும் அரிய நூலின் அவதாரத்திற்குக் காரணம்.

திருப்பாவை, கண்ணன் விஷயமாய் இளம் கோபிகைகள் நோன்பு நோற்றதைக் கூறுவது. கோகுலத்தில் ஒரு காலத்தில் மழை பெய்யாமல் நாடெங்கும் வருந்தியது. பசுக்களைக் காத்து அதன் மூலம் பிழைப்பவர்கள் கோபர்கள். பசுக்கள் நன்றாய் விருத்தியாக வேண்டுமென்றால் புற்றரைகள் நன்கு செழித்திருக்கவேண்டும். புற்றரைகளோ மழையில்லாவிடில் காணவரியவை. ஆதலால் அம்மழையின்மையால் கோகுலத்திடையர்கள் பட்டபாடு சொல்லொணாது. அக்குறையை நீக்க மேகங்களைப் பொழியும்படி செய்ய அக்காலத்தில் வழங்கி வந்த அநேக விருதங்களை அனுஷ்டித்தும் நோன்புகளை நோற்றும் வந்தார்கள். அந்நோன்புகளில் ஒன்று "மார்கழி நீராட்டம்'' எனப்படுவது. இதற்கு ஊரிலுள்ள கன்னிகழியாத இளம் பெண்கள் ஒன்றுகூடி அந்நோன்புக்குத் தலைமகனாய் ஒரு மணம்புரியாத ஆடவனை வரித்து அவனிடம் தமது நோன்புக்கு வேண்டிய பறை, விளக்கு, சங்கங்கள் முதலிய சில வஸ்துக்களை யாசித்துப் பெற்று அவைகளை உபயோகப்படுத்தி மார்கழி மாதம் முடிய தினமும் காலையில் நீராடி நியமமாய் அம்மாதத்தைக் கழித்து மாத முடிவில் நோன்பை முடித்து விடுவதுதான். இந்த நோன்பை கோபிகைகள் நோற்றதாகக் கேள்வியுற்ற ஆண்டாள் தானும் அம்மனோ நிலையை அவலம்பித்து கண்ணனைக் குறித்து நோன்பு நோற்கும் பாவனையில் இத்திருப்பாவைப் பாசுரங்கள் பாடி, தான் பேரானந்தத்தை அனுபவித்ததுமன்றி அம்மாதிரி உயர்ந்த பகவதனுபவத்தை அப்பாசுரங்கள் மூலமாய் நமக்குத் தந்து நம்மனைவரையும் வாழ்வித்திருக்கிறாள்.

இப்படி அருமையான பகவத் பக்தியையடைந்த ஆண்டாளை பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற திருவரங்கச் செல்வனார் தம் திருமுன்பே அழைத்து வரக் கட்டளையிட்டு அப்படியே வந்த ஆண்டாளை, தான் தனக்கு மாமனார் என வரித்த பெரியாழ்வாரிடம் பெற்று, மணம் செய்வித்துக் கொண்ட விருத்தாந்தத்தை எல்லோரும் அறிவார்கள் அது முதல் வைணவ சமயத்தில் பக்தியிற் சிறந்த ஆழ்வார்களுள் ஒருவராய்க் கருதப்பட்டு வருகிறாள் ஸ்ரீ ஆண்டாள். அவர்கள் பாடிய பிரபந்தங்களிலுள்ள சொற்சுவையையும் பொருட் சுவையையும் அதிசயித்துக் கிடக்கும் ஆண்டாளுடைய அருளிச் செயல்கள். பிறவியே பெண்ணாகையால் பகவத் ப்ரேமம் ஆண்டாளுக்கு இயல்பாய் வந்து விட்டது. மற்றைய ஆழ்வார்கள் சஷ்டப்பட்டுக் கற்ற தசை ஆண்டாளுக்கு எளிதில் உண்டாயது. இத்தகைய பெருமை வாய்ந்த ஸ்ரீ ஆண்டாளை வழிபடும் மாதம் இது வாதலால் தான் இம்மார்கழிக்குமிகுந்த ஏற்றம். இந்த மாதத்தில் ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையை தினமும் பகவத் ஸன்னதிகளில் அனுசந்திப்பவர்கள் ஆண்டாள் அடைந்த பேரின்பத்தைத் தாமும் எளிதில் அடைந்து வாழ்வார்கள் என்பது ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கை.

நமது தொடர் கதை

# விதியின் விளையாட்டுகள் ?

(மௌனத்கல்யன் எழுதியது.)

[முந்திய வாரங்களில் வேளியான தன்சுருக்கம்:—திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு கிராமத்தில் வசிக்கும் கோமதியின் புருஷன் சிதம்பரநாதன் கொலைக் குற்றத்திற்காகச் சென்னையில் கைதுசெய்யப்பட்டிருப்பதாகத் தந்தி வரவே எல்லாரும் சென்னைக்குப் போகின்றனர். சிதம்பரநாதனுடன் வியாபாரத்தில் கூட்டாளியாகவிருந்த பரமசிவம் பிள்ளை கம்பெனிப் பணத்தைக் கையாடிவிடவே சிதம்பரநாதன் ஆத்திரத்தில் அவனைக் கொன்றுவிட்டதாகப் போலீஸார் அவன் மீது குற்றம் சுமத்தியதில் சிதம்பரநாதனுக்கு 14 வருஷம் கடுங்காவல் விதிக்கப்படுகிறது. சென்னை சிறையில் சிதம்பரநாதன் 5 வருஷ காலம் கழித்த பின் சிதம்பரய்யர்என்ற ஒரு ராஜியக் கைதியுடன் அவனுக்குச் சிநேகம் ஏற்படுகிறது.]

பஞ்சத்தினால் பாதிக்கப்பட்டவிடங்களில் குடியிருந்தவர்களுக்கு, ஜெயிலில் ஒருவருக்கொருவர் நட்பு எவ்வளவு சீக்கிரம் எவ்வளவு உறுதியாக ஏற்படுமெனபது விளங்கும். சிதம்பரநாதனுக்கும் சிதம்பரய்யருக்கும் அத்தகைய நட்பு வெகு சீககிரத்தில் உண்டாகிவிட்டது. தனக்கு ஒழிவுள்ள நேரங்களிலெல்லாம் சிதம்பரநாதன் அய்யருடைய அறையிலேயேயிருப்பான். இரவில், இருவரும் தனித் தனியாக வைத்துப் பூட்டப்பட்ட பின்னரும் அவர்களிடையே சம்பாஷணைகள நடக்கும் வழக்கும் ஏற்பட்டது.

சிதம்பரய்யர், நல்ல படித்த அறிவாளி. உயர்ந்த கொள்கைகளும் மனப்போக்கும் உடையவர்; அவருடைய வார்த்தைகள், அபிப்பிராயங்கள் யாவும் சிதம்பரநாதனுடைய மனத்தில் ஒருவிதப் புதியஉணர்ச்சியையெழுப்பின. அவர் எந்த ஒரு மகானுடைய உபதேசங்களைப்படித்து மனச்சாந்தியைப் பெற்றாரோ, அந்த மகானுடைய தெய்வீகப் போதனைகளைச் சிதம்பரநாதனுக்கும் உபதேசம்செய்தார்.

"உன்னுடையஉயிரேபோவதாயிருந்தாலும், எத்தகைய பெரிய ஆபத்து விளைவதாயிருந்தாலும் சத்தியத்தைச் சொல்லவும் நியமானதைச் செய்யவும் பின் வாங்காதே.

உனக்கு விரோதியென்று எவனுமிருக்க முடியாது. உன் மனதை வருத்துவதான— உனக்குத் துன்பத்தைக் கொடுக்கக்கூடிய—ஒரு செய்கையை ஒருவன் செய்து விடலாம். அதனால் அவன் தன்னை உன்னுடைய விரோதியென்று அவனாகவே நினைத்துக்கொள்வான். ஆனால் அவன் உன்னுடைய விரோதியல்ல. அவனிடமும் உன்னுடைய அன்பைச் செலுத்தி அவனுடைய நினைவை நீ மாற்றிவிட முயல வேண்டும்."

அதையெல்லாம் கேட்கக் கேட்கச் சிதம்பரநாதனுடைய மனம் தெளிவடைய ஆரம்பித்தது. அந்தத் தடவை வழக்கத்திற்கு விரோதமாக ஆறு நாட்களாகியும் கோமதி அவனைக் காணவாராததால் எழுந்துயரம ஏக்கம் ஏமாற்றம் யாவும் அவனுக்கு அவ்வளவு கொடியனவாகத தோன்றவில்லை. ஆயினும் ஒவ்வொரு சமயம் அவன் அதைக்குறித்துமனம் பதைத்தான். கோமதிக்கு என்ன நேர்ந்தது. அவள் வாராததன் காரணமென்ன வென்பதை மாத்திரம் யாராவது வந்து சொல்வார்களானல் அவருக்கு அவன் என்னதான் கொடுக்க மாட்டான் !



சிவகாமி நல்ல புஸ்தகங்களைப் பொறுக்கி எடுத்துப் படுக்கையாகவிருந்த கோமதிக்கு அவற்றைப் படித்துக் காட்டினாள்.

ஏழாவது நாளும் பிறந்தது. அன்றும் கோமதி வரவில்லை. அவனால் அந்தச் சந்தேகம் பொறுக்க முடியாத நிலைமையை யடைந்தது. ஏக்கம் பயம் எல்லாம் மும்முரமாகவெழுந்து அவனை வதைக்கத் தொடங்கி விட்டன. என்னவென்றாலும் சிதம்பரநாதன் மனிதன் தானே !

அன்றைய தினம் பகல் இரண்டு மணிக்குமேல் அவனுடைய மனத்தில், கோமதி வாராததால் உண்டாய உணர்ச்சிகள் யாவும் கட்டிலடங்காமல் பெருகி விட்டன. அதனால் குழப்ப மடைந்திருந்த அவனுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. ஒரு கடிதம் எழுதி அதை யாராவது ஒரு வார்டர் மூலம் கொடுத்தனுப்பி, அவளைப் பற்றித் தகவல் அறிந்து கொண்டு வரும்படிச் செய்தா லென்னவென்ற எண்ணம் தோன்றியது. அவன் தன்னுடைய ஆவல் மிகுதியில் அதனால் விளையக்கூடிய பலாபலன்களைப் பற்றி யோசிக்கவேயில்லை.

உடனே ஒரு காகிதம் பென்சிலும் எடுத்து ஷண்முக சுந்தரத்திற்கு ஒரு கடிதம் எழுதினான். அதில், கடிதம் கொண்டு வருபவர் மூலம், கோமதி முதலியோர் வந்து காணாததன் காரணத்தைத் தெரிவிக்கும்படியும், அதைக்கொண்டு வருபவருக்குக்கொஞ்சம் இனம்கொடுக்கும்படியும் எழுதினான். அதையவன் எழுதி முடித்த தருவாயில் அங்கு ஜெயிலர் வந்தார். அவரைக் கண்டவுடன் சிதம்பரநாதன் கடிதத்தைச் சட்டென்று எடுத்து மறைத்துக் கொள்ள முயன்றான். ஆனால் அவர் அதைக்கவனித்து விட்டாராகையால் அதையுடனே தம்மிடம் கொடுக்கும்படிச்சொல்லி வாங்கிக் கொண்டார்.

அந்த விஷயம், மேலதிகாரிக்கு அறிவிக்கப் பட்டது. அன்றையதினம் சூப்பிரன்டண்டு துரையவர்கள், இராஜீயக் கைதிகள் செய்த ஒரு தகராறினால் நிரம்பவும் கோபத்துடனிருந்தாராகையால, அதைக் கேட்டவுடன் சிதம்பரநாதனைத் தம்முன் கொண்டு வந்து நிறுத்தும்படி உத்தரவிட்டார். அவன், நிரம்பவும் கவலையுடன் வந்து நின்றான்.

"நீ இந்தக் கடிதம் எழுதினாயா ?"

"ஆம்."

"இதை யெப்படி வெளியே யனுப்ப உத்தேசம்?"

"நான் இன்னும் தீர்மானம் செய்யவில்லை"

"அயோக்கியக் கழுதை! பொய் சொல்லுகிறாயா?"

"இல்லை நான் சத்தியமாகவே சொல்லுகிறேன். என்னுடைய கவலையில்.........."

"வாயை மூடு! ஜெயிலர்! இங்கிருந்து தகவல்கள் வெளியே கொண்டு போகப்படும் விஷயம் எனக்கு நிரம்பவும் கவலையை யுண்டாக்கிக்கொண்டிருந்தது. இந்தத் திருட்டுப் பயல் உண்மையைச் சொல்ல மாட்டான். அவனைத் துணிகளைக் கழற்றி விட்டுப் பன்னிரண்டடி கொடுங்கள்" என்று உத்தரவிட்டார்.

* * *

இரத்தம் ஒழுகிய முதுகுடன் சிதம்பரநாதன் ஜெயிலுக்குள்ளேயே யிருக்கும் ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச செல்லப்பட்டான். அந்தத் தண்டனை நிறைவேற்றப்பட்ட காலத்தில் அவன் அனுபவித்த துனபத்திலும், அதன் பின்னர் அவன் அடைந்த நோவு, அவனால் சகிக்க முடியாததாகவிருந்தது. புழுபபோலத் துடித்தான் அந்த நிலைமையிலும் அவனுடைய மனத்தில் 'சாந்தி' நிறைந்திருந்தது.

அன்றைய இரவு முழுவதும் அவன் நரக வேதனை யனுபவித்தானென்றே சொல்லவேண்டும். மறுநாள் காலை எட்டு மணிக்கு, ஆஸ்பத்திரிக்கு வந்து மருந்துகள பெற்றுக் கொண்டு செலலும் கைதிகளின் கூட்டம் வந்தது அதில் சிதம்பரய்யருமிருந்தார். அவரைக் கண்டவுடன் சிதம்பரநாதன், அவரைத் தனதருகில் அழைத்து வாசசெய்து மிகத் தணிவான குரலிலாவது அந்தப் பாட்டை ஒருதரம் பாடும்படி வேண்டினான்.

## அத்தியாயம் 5
## கோமதியின் தவிப்பு.

சிதம்பரநாதனுடைய வழக்கு அப்பீலிலும், அவனுக்குப் பிரதிகூலமாக முடிந்த விஷயம் கோமதிக்கு ஒரு பேரிடி

போல வந்தது. அந்தப்
பேதைப் பெண்மணி அதைக்
கேட்டவுடன் மூர்ச்சையடை
ந்து வேரற்ற மரம்போலச்
சாய்ந்துவிட்டாள். கொஞ்ச
மிருந்த நம்பிக்கையும் அத்
துடன் அற்று விட்டது.
அதன்பின்னர் அவள் ஒரு
நடைப் பிணம்போலவே
காலங்கழித்தாள். அந்த அதி
ர்ச்சியின் வேகம் அவள் மறு
முறை சிதம்பரநாதனை சிறை
யில் கண்டு பேசியவரை குறை
யவில்லை.

சிதம்பரநாதனைக் கண்ட
வுடன் அவளுடைய துயரம்,
கரையுடைத்தோடும் காட்டாரு
வியைப்போல எழுந்து கண்
ணீராக ஓடியது. அவளது பரி
தாபகரமான தோற்றத்தைக்
கண்டு அவன் நடுங்கிப்போய்
விட்டான். முதலில் அவன்
சந்தேகித்தது போலல்லாமல்
இருபது வருஷக் கடைசியில்,
தானொருவனே மிஞ்சுபவனாக
விருக்கக்கூடுமென்று அவனுக்
குத் தோன்றியது. அவன்
தனது உணர்ச்சிகளையெல்லாம்
அடக்கிக்கொண்டு அவளை நிர
ம்பவும் அன்புடன் தேற்றி,
அவள் தனக்காகவாவது
உயிர் வாழவேண்டுமென்று
கேட்டுக்கொண்டான். அவ
னுடைய சொற்கள் கொஞ்சம்
பலனளித்தன.

கோமதியின் மனதில் சந்
தோஷம் உற்சாகம் என்ற
உணர்ச்சிகளுக்கு இடமே
யில்லை. பதுமைபோல உண்ப
தும் படுத்துப் புரளுவதுமாக
அவள் தினங்களைக் கழிக்க
லானாள். சிங்காரம்மாளும்
ஷண்முகசுந்தரமும் அவளிடம்
நெருங்கவும் அஞ்சினர். அந்த
நிலைமையில் அவளிடம் எவ்
வாறு நடந்துகொள்ளவேண்டு
மென்றே யவர்களுக்குத்
தோன்றவில்லை. சிவகாமி மாத்
திரம் இருந்திராவிடில,
கோமதி இதற்குள், மனித
உலகத்தினரின் கண்களுக்கு
மறைந்திருப்பாள்.

சிவகாமி வயதில் சிறிய
வளாயினும், அவளுடைய
நுண்ணிய அறிவு, கோம
திக்கு நேர்ந்துள்ள துக்கத்
தின் அளவை யுணர்ந்து
கொண்டது. இயற்கையாகப்
பெண்களிடம் குடி கொண்
டுள்ள, ஒரு தாயின் அன்பு,
வாத்ஸல்யம் அந்தச் சிறுமி
யின் உள்ளத்திலிருந்து ஊற்
றெடுத்துச் சுரந்தது. ஒரு
ஸ்திரீயின் கலப்பற்ற அன்பு,
மேன்மை பொருந்திய வாத்
ஸல்யம், அவளுடைய ஹிருதய
த்திலிருந்து வெளிப்பட்டது.

அவள் கோமதியைத் தன்
னுடைய ஏகபோக உரிமைப்
பொருளாக ஏற்றுக்கொண்டு
விட்டாள். சமயோசிதமாக
வும் பக்குவமாகவும் பேசியும்,
இனிய பாட்டுகளால் அவளு
டைய மனத்தை அதன் துய
ரத்திலிருந்து பிரித்தும் ஆறு
மாத காலத்திற்குள், கோமதி
யை அவள் ஒருவாறு தேற்று
வித்து விட்டாள். தன்னை மற
ந்து பரப்பிரும்ம ஸ்வரூபமாக
விருந்த கோமதி கொஞ்சம்
கொஞ்சமாக பசி தாகம் முத
லியவற்றை உணர ஆரம்பித்
தாள். கொஞ்சம் கொஞ்சமாக
அவளுடைய அறிவும் தெளி
வடைந்தது. ஆயினும், அடிக்
கடி அவளுடைய ஹிருதயம்,
மிகக் கொடிய ஒரு புண்ணி
னால் துன்ப மடைவதைப்
போலத் துடித்துக் கொண்டி
ருந்தது.

சிவகாமி நல்ல புஸ்தகங்க
ளாகப் பார்த்து வாங்கி வரச்
செய்து, அவற்றைப் படித்துக்
காட்டிக் கோமதியின் மனத்
தில் அவற்றின் மீது பற்று
தலை உற்பத்தி செய்து விட்
டாளாகையால், கோமதி தானா
கவே புஸ்தகங்களை யெடுத்துப்
படிக்க ஆரம்பித்தாள். கொ
ஞ்சம் கொஞ்சமாக அவற்றின்
இனிமை அவளது உள்ளத்
தைக் கவர்ந்து கொண்டது.
சில கதைகளைப்படிக்கும் பொ
ழுதெல்லாம், உலகம் உண்டா
கிய நாள் முதல், பெண்கள் தங்
களுடைய காதலைப் பிரதிப் பிர
யோசனத்தை யெதிர்பாராது
பொழிந்து கொண்டே வந்து
ள்ள உண்மை அவளுக்கு விள
ங்கும். அப்படியே புஸ்தகத்
தை மடித்து வைத்துவிட்டுச்
சிதம்பரநாதனது வடிவத்
தைக் கண்முன் கொண்டுவந்து
நிறுத்தி அதனுடன் மானசீ
கச் சம்பாஷணைகள் செய்யத்
தொடங்கி விடுவாள். அவர்
கள் முன்புசிதம்பரநாதன் வசி
த்துவந்த வீட்டிலேயே ஒரு
பகுதியில் வசித்து வந்தனர்.
சிதம்பரநாதன் தண்டனை
யடைந்த ஆறுமாதங் கழித்து
சிவகாமி ருதுவடைந்தாள்.
அந்த விஷயம் பொன்னையா
பிள்ளைக்குத் தந்தி மூலம் அறி
விக்கப்பட்டது. அவர் குடும்ப
சகிதராய் சென்னைக்கு வந்து
சேர்ந்தார். அதன் சம்பந்த
மானசடங்குகளை அந்த வீட்
டிலேயே நடத்துவது
அசம்பாவிதமென்று
தோன்றியதாகையால்
அவர் கவலைகொண்டவராய்
அதைக் குறித்து சிங்காரம்மா
ளிடம் பேசினார். ஆனால் அந்த
விஷயத்தை அவருக்கு முன்ன
தாகவே அவர்கள் ஆலோ
சித்து முடிவு செய்துவிட்
டிருந்தார்களாகையால்,
அந்தச் சடங்குகள் யாவும்
அந்த வீட்டிலேயே நடை
பெற்றன. கோமதி அந்தச்
சிறுமியிடம் கொண்டிருந்த
அளவற்ற வாஞ்சை முழுவ
தும் அச்சமயம் வெளிப்பட்டு
அவர்களைப் பிரமிக்கச் செய்து
விட்டது.

இயந்திர சக்தியினால் இயக்
கப்படும் பதுமைபோல உணர்
ச்சிகளற்றுத் தோன்றிய கோ
மதி அந்தச்சமயத்தில் தானே
அந்த விஷயங்களை மேற்பார்
த்து உற்சாகத்துடன் அவற்
றை நடத்துவித்தாள். அது
கழிந்தவுடன் அவள் முன்
போலத் தனது ‘சொரணை’
யற்ற நிலைமைக்கு வந்துவிட்
டாளாகையால், அந்த இடைக்
காலத்தில் அவளிடம் காணப்
பட்ட மாற்றம் அவர்களை
வியப்படையச் செய்துவிட்
டது.

அதற்குப் பின்னரும் பொன்
னையாபிள்ளை அங்கு இரண்டு
நாட்கள் தங்கினார். பின்னர்
அவர் ஊருக்குச் செல்லத்
தயார் செய்துகொண்டு சிங்கா
ரம்மாளிடம் தம்முடைய
மகளையழைத்துச் செல்லப்
போவதாகத் தெரிவித்தார்.
அதைக் கேட்ட சிங்காரம்
மாள் திடுக்கிட்டுவிட்டாள்.
சிவகாமி அவர்களுக்கு எவ்வ
ளவு முக்கியமானவள் என்ப
தையும் அவள் சென்றுவிட்
டால் என்ன நேர்ந்து விடுமோ
வென்றும் நினைத்துப் பயந்து
விட்டாள்.

“என் அண்ணா! குழந்தை
இங்கேயே யிருப்பதில் உங்க
ளுக்கு என்ன ஆக்ஷேபணை?”
என்று வினவினாள்.

பொன்னையா பிள்ளைக்குப்
பதில் சொல்லத் தோன்ற
வில்லை, அவளுடைய குரல்
அந்தக் கேள்வியில் என்ன
அர்த்தமிருந்ததென்பதை
அவருக்குணர்த்தியது “இது
வரையில் அவள் இங்கே இருந்
தது சரிதான். புத்தியறிந்த
பிறகும் அவள் இப்படி வீட்
டைவிட்டு இருப்பது சரியல்ல
வல்லவா?” வென்று கேட்
டார்.

“ஆனால் அண்ணா அவள்
என்னிடம் தானேயிருக்கப்
போகிறாள்?”

“அப்படியில்லையம்மா, என
க்கு ஒரு ஆக்ஷேபனையுமில்லை.
ஆனால் பெண்கள விஷயம் அப்
படியல்ல. தவிர சிவகாமியி
னுடைய படிப்பைப் பற்றியே
எனக்குக் கவலையாக விருக்கி
றது. அவளைப் பள்ளிக்கூடத்
திற் கனுப்பாவிட்டாலும் வீட்
டிலாவது ஏதாவது கொஞ்சம்
கற்றுக்கொள்வாள்.”

“அண்ணா, நீங்கள் அவளு
டைய படிப்பைப் பற்றிக் கவ
லைப்படவேண்டாம். தம்பி
ஒரு மாதத்திற்கு முன்பு கூட
அவளை ஏதாவது பெண்கள்
பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப
லாமே யென்று கேட்டான.
தற்சமயம் அவள் சேர்ந்தா
லுங்கூட அவள் வயதிற்குத்
தகுந்த வருப்பில் சேர்ந்து,
படிக்கலாமாம். நீங்கள் அவ்
வளவு தூரம் அவளைத்தயார்
செய்திருக்கிறீர்களாம். வீட்
டிலேயே வந்து படிப்புச்
சொல்லிக் கொடுக்கக்கூடிய
படித்த பெண்பிள்ளைகள் இரு
க்கிறார்களாம். யாராவது
ஒருவளை அமர்த்தி விடச்
சொல்லுகிறேன். கோமதி
யும் அதனால் பலனடையக்
கூடும். அண்ணா நான்
என்ன சொல்லட்டும். அவ
ளால் தான் கோமதியை
இன்று நான் கண்ணால் பார்த்
துக் கொண்டிருக்கும பாக்கிய
மாவது எனக்கிருக்கிறது.
அவளையும் நீங்கள் அழைத்துக்
கொண்டு போய் விட்டால்
நான் என்ன செய்வேன்?”
என்று கண்ணீர் விட்டுக்
கொண்டே சொன்னாள்.

பொன்னையா பிள்ளையின்
மனம் இளகி விட்டது. அச்
சமயம் அங்குவந்த ஷண்முக
சுந்தரமும் அந்த விஷயமாக
அவரிடம் நிரம்பவும் இரங்கு
தலாகக் கேட்டுக்கொள்ளவே
அவர் சம்மதித்து விட்டார்.
அவருடைய பனைவி கொஞ்சம்
ஆட்சேபித்தாள். அதனால்
அவர் தம்முடைய மூத்த
பையனையும் அங்கேயே விட்டு
விட்டுச் செல்வதென்றும்,
அவனுடைய கல்விச் செலவை
மாத்திரம் அவர் அனுப்பி
வைக்க வேண்டுமென்றும் தீர்
மானம் செய்யப்பப்பட்டது.

(தொடரும்.)

# ஜோதிர்மண்டலம்

## ஆங்கிரஸ வருஷம் தைமாதம்.

(ஸ்ரீமான் P. ஸ்ரீநிவாஸவரதன் எழுதியது.)

ஜோதிடத்தில் பிரியமுள்ளவர்கள் பொருட்டுக் கீழே இம் மாதத்திய (தைமீ முதல் தேதி, சூரிய உதயத்திற்குச் சரியாக) ராசிச் சக்கிரத்தைக் கொடுத்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராஹு | 1உ மகா—ரவி<br>11உ மகா—புதன்<br>13உ ஸிம்ம—குரு<br>20உ மகா—சுக்கிரன்<br>29உ கும்ப—புதன்<br>30உ கும்ப—ரவி | | |
| சனி | | | குஜன், கேது. |
| ரவி, புதன், சுக்கிரன் | | | குரு |

சென்னையில் இராக்காலத்தில் நன்கு விளங்கும் நக்ஷத்திரக் கூட்டங்களைக் கீழேயிருக்கும் படம் காட்டுகிறது. படத்திலுள்ளவாறே நக்ஷத்திரக் கூட்டங்கள் இம்மாதம் முதல் தேதி இரவு (13—1—33), 10—32 மணிக்கும், 15—ம் தேதி (27—1—33) 9—34 மணிக்கும், 30 ம் தேதி (11—2—33), 8—35 மணிக்கும் நம் பார்வைக்குத் தென்படும். சென்னைக்கு வடக்கேயுள்ள ஊர்களில் இக்கூட்டங்கள் சிறிது தென்புறம் இறங்கியும், தெற்கிலிருக்கும் ஊர்களில் சிறிது வடபுற மேறியும் தோன்றும். ஆனால் அவைகளின் பொது அமைப்பில் சிறிது மாறுபாடும் ஏற்படாது. நக்ஷத்திரங்கள், தினமும் முன் தினத்தைவிட சுமார் 4 நிமிஷம் முன்னதாகவே உதயமாவதால், இன்று இப்படம் 10—32 மணிக்குச் சரியான ஆகாயக் காக்ஷியைக் காட்டினால், அடுத்த நாள் 10—28 மணிக்கு, ஆகாயத்தில் தோன்றும் நக்ஷத்திரங்களைப் படம் காட்டுகிறது. ஆகலால் படத்தை எந்தத் தேதிக்கு வேண்டுமானாலும் உபயோகித்துக் கொள்ளலாம்.

### படத்தை உபயோகிக்கும் வழி.

நாம் எத்திசையை நோக்கி நிற்கிறோமோ அத்திசையைப் படத்தின் அடிப்பாகமாகக் கொண்டால் நம் எதிரில் தோன்றும் நக்ஷத்திரங்கள், அடிவானமுதல் உச்சி வரையில், படத்தில் அடிப்பாகமுதல். நடுவரையில் காணப்படும். அதன் வல, இடப்புறங்களிலிருக்கும் நக்ஷத்திரங்களை படத்தில் முறையே வல, இடப் புறங்களில் காணலாம்.

இம்மாதம், மேற் குறித்த நேரத்தில், 'ஆகாச கங்கை' ஆகாயத்தில் வடமேற்கு முதல் தென்கிழக்கு வரையில் மிகவும் ஒளிபெற்ற பாதை போல் தோன்றுகிறது. அது உச்சியில் அகன்றும், அடிவானத்தருகில் குன்றியும் இருப்பதைக்காணலாம். அது முக்கியமாக, கஸியோபியா, பர்ஸியூஸ், ஆரிகே, ரிஷபம், மிதுனம், ஓரியன், கானிஸ் மேஜர், ஆர்கோ நேவிஸ் முதலிய கூட்டங்களின் வழியாகச் செல்கிறது.

ராசிக்கூட்டங்களில் மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம் முதலியவை முறையே மேற்கு முதல் கிழக்குவரையில் தென்படுகின்றன. உச்சிக்கு இருபுறத்திலும், ரிஷபமும், மிதுனமும் இருக்கின்றன. அவைகளின் முக்கிய நக்ஷத்திரங்களாகிய புநர்வசுவும் (மிதுனத்தின் இரண்டு பிரகாசமான நக்ஷத்திரங்கள்) கிருத்திகையும் (அநேக சிறு நக்ஷத்திரங்கள் சேர்ந்து ரிஷபத்தில் இருக்கும் சிறு கூட்டம்) பார்வைக்கு அழகு தருகின்றன. இப்பொழுது உதயமாயிருக்கும் சிம்மக் கூட்டம் மிகவும் அழகு பொருந்தியது. ஒரு சிம்மம் படுத்திருக்கும் தோற்றத்தை இக்கூட்டம் காட்டுகிறது. இதன் முக்கியநக்ஷத்திரமாகிய 'மகம்' ஆகாயத்திலுள்ள அதிப்பிரகாசமான நக்ஷத்திரங்களில் ஒன்று. மீனக்கூட்டத்திலும் கடகக்கூட்டத்திலும் பிரகாசமான நக்ஷத்திரங்கள் கிடையாது.

வடக்கே துருவ நக்ஷத்திரமும், அதன் மண்டலத்தில் பெரும்பாகமும் விளங்குகின்றன. வடமேற்கே ஸப்தரிஷிக் கூட்டத்தில், முக்யமாக ஐந்து ரிஷிகள் உதயமாய் விட்டனர். அக் கூட்டம் முழுவதும் இன்னும் சிறிது நேரத்தில் நம் பார்வைக்குப் புலப்படும். ஆரிகே உச்சிக்கு வடக்கேயும் அதனருகில் பர்ஸியூஸ், கஸியோபியாவும் இருக்கின்றன.

"ஹைட்ரா" என்னும் நீர்ப் பாம்பு கிழக்கில் தோன்றியிருக்கிறது. உச்சிக்கு சிறிது தெற்கில், ஆகாயத்தில் மிகவும் அழகு பொருந்திய கூட்டமாகிய ஓரியன் காணப்படுகிறது. அதன் அடிப்பாக முதல் தென் அடிவானம் வரை, எரிடானஸ் வியாபித்திருக்கிறது. ஸீடஸ் மறையும் தருவாயிலிருக்கிறதை அக்னி நக்ஷத்திரமும் (மிருகவியாதா) அதன் கூட்டமும் மிகவும் அழகாக விளக்குகிறது. ஆர்கோநேவிஸ் என்னும் ஆகாயக் கப்பல் தென்-கிழக்கு வானத்தை விட்டு வெளிவந்து, மிகவும் நேர்த்தியான காக்ஷியை அளிக்கிறது. அதன் முக்ய நக்ஷத்திரமாகிய 'அகஸ்தியர்' பிரகாசமான நக்ஷத்திரங்களில் ஒன்று.

### க்ரகங்கள்.

புதன்:—இம்மாத முதலில் தனுசுக் கூட்டத்தில் காணப்பட்டு 15-ம் தேதியன்று (27-1-33) மகரத்திற்கு மாறுகிறது. மாசிமாதம் முதல் தேதி வரையில் இக் கூட்டத்திலேயே இருக்கிறது.

சுக்கிரன்:— இம்மாதம் முதல் தேதி (13-1-33) சுக்கிரன் தனுசுக் கூட்டத்தையடைகிறது. 25ம் தேதியன்று தனுசைக் கடந்து மகரத்திற்குச் செல்கிறது. இம்மாதம் முழுவதும், இதை அதிகாலையில் கிழக்கில் காணலாம். இது அப்பொழுது விளங்கும் எல்லா நக்ஷத்திரங்களையும்விட அதிப்பிரகாசமாய்த் தோன்றுகிறது.

குஜன்:—சென்ற சில மாதங்களாய் குஜனை சிம்மத்தில் கண்டோம். இது சிம்மத்தைக் கடந்து கன்னிக்குச் செல்லும் சமயத்தில் இம்மாதம் 10ம் தேதி (22-1-33) வக்rிக்க ஆரம்பிக்கிறபடியால் இம்மாத முழுவதும் சிம்மத்திலேயே இருக்கும்.

குருவும் குஜன் மாதிரியாகவே சிம்மத்தைக் கடக்க



# வியாபாரப் பகுதி

## வியாபாரக் குறிப்புகள்.

### நூல் மார்க்கெட்டில் ஜப்பானின் போட்டி.

சென்னை, ஜனவரி, 10—

**நாணயமாற்றம்.**

புது வருஷமும் சென்ற வருஷத்தை விட மேலாகவில்லை என்று கூறும்படி நாணயமாற்ற மார்க்கெட் இருந்து வருகிறது. சுந்தி தெரிசன விகிதங்கள் 1/6-5/32 பென்ஸாக விருக்கிறது. நாணய மாற்றம் இந்த நிலைமையி லிருக்கும் வரையில் தங்க ஏற்றுமதியும் ஸ்டர்லிங் விற்பனையும் இப்படியேதானிருக்கும்.

**ரொக்கக்கடை.**

தேவைக்குப் பண விகிதம் 2% ஆகவிருக்கிறது. பாங்கி வட்டி 4%லும் இங்கிலாந்து பாங்கி வட்டி 2%லும் மாறுதலில்லாம லிருக்கின்றன.

டிஸம்பர் 30-ந் தேதியோடு முடிவாகிய வாரத்திய இம்பீரியல் பாங்கி வரவு செலவு இருப்பு யாதாஸ்தின்படி பப்ளிக் டிபாஸிட்டுகள் ரூ. 81·56 லக்ஷமும், இதர டிபாஸிட்டுகள் ரூபா 1·22 லக்ஷமும் அதிகரித்திருக்கின்றன. கவர்ன்மெண்டு செக்யூரிட்டிகள் ரூ. 19 லக்ஷமும் இதர செக்யூரிட்டிகள் ரூ. 5 லக்ஷமும் அதிகம். இந்தியா கவர்ன்மெண்டிற்குக் கொடுத்துள்ள கடன் 3 கோடி ரூபாயில் மாறுதலில்லாமலிருக்கிறது. கடன்கள், ரொக்கக் கிரெடிட்டுகள், உள்நாட்டு உண்டியல்கள் முறையே ரூ. 17·47; 104·8, ரூ. 37·16 லக்ஷம் அதிகரித்திருக்கின்றன. வெளி நாட்டு உண்டியல்கள், ரொக்க இருப்பு முதலியவை முறையே ரூ. 10 லக்ஷமும் ரூ. 97·49 லக்ஷமும் குறைந்திருக்கின்றன. வரவு செலவு விகிதம் 28·92லிருந்து 27·18%க்குக் குறைந்திருக்கிறது.

**தங்கம், வெள்ளி.**

ஸ்டர்லிங்-டாலர் விகிதத்தின் அமைதியை ஒத்து உள்ளூர் தங்க மார்க்கெட்டில் விலைகள் அமைதியாக விருந்தது. பம்பாய் தங்கம் ரூ. :0-4-0 லிருந்து 3 அணுக்குறைந்தது. சவரன்களும் ரூ. 19-4-0 லிருந்து ரூ. 19-க்குக் குறைந்தது. வியாபாரம் குறைவாகவே இருக்கிறது. ஏற்றுமதிக்காகத் தங்க வரத்து குறைவாக விருக்கிறது. சில நாட்களில் மார்க்கெட்டில் விற்பனைக்கு இத்தங்கம் வரவேயில்லை.

வெள்ளி மார்க்கெட்டில் ஷாங்காயிலிருந்துவந்த வலுவானசெய்திகளாலும், டேயலின் அதிகரிப்பினாலும் விலை ரூ 50-8-0 லிருந்து ரூ. 51-க்கு அதிகரித்தது. லண்டனிலும் விலை 2 பென்ஸ் அதிகரித்திருக்கிறது. வியாபாரம் குறைவாக விருக்கிறது. வெள்ளிமீது தீர்வை போடப்போவதாக இன்னும் மார்க்கெட்டில் வதந்திகள் இருந்து வருகின்றன. இவைகள் ஒரு நிலைமைப்பட்டால் ஒழிய மார்க்கெட்டில் விசேஷ வியாபாரம் நடக்க இடமில்லை

**தங்க ஏற்றுமதி.**

ஜனவரி 7-ந் தேதியோடு முடிவாகிய வாரத்தில் ரூ. 55, 70, 978 பெறுமானமுடைய தங்கம் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று.

லிவர்பூலுக்குச் சென்ற 'டாரண்டியா' என்ற கப்பலில் ரூ. 88, 406 பெறுமானமுடைய தங்கமும், ரூ. 57,590 பெறுமானமுடைய சவரன்களும் ஏற்றுமதியாயிற்று. லண்டன் சென்ற 'சித்ரால்' என்ற கப்பலில் ரூ. 54,82,572 பெறுமானமுடைய தங்கமும், ரூ. 1,51,484 பெறுமானமுடைய சவரன்களும் ஏற்றுமதியாயிற்று.

இங்கிலாந்து தங்க மதிப்பு முறையிலிருந்து விலகிக்கொண்ட பிறகு இந்தியாவின் சார்பாக இதுவரை ரூ. 1,05,83,31,168 பெறுமானமுடைய தங்கம் ஏற்றுமதியாகியிருக்கிறது.

**ஜவுளி நூல்.**

சீமை ஜவுளி மார்க்கெட்டில் சில்லரையாகத்தான் வியாபாரம் நடந்து வருகிறது. தென் ஜில்லாக்களிலிருந்து வந்துகொண்டிருந்த கேள்விகள் வியாபாரமாக முடியவில்லை. கடைசியாக ஏதாவது மாறுதலேற்பட்டாலொழிய பொங்கலிற்காக வியாபாரம் விசேஷமாக நடக்கும் என்று நம்ப இடமில்லை. சுதேசித் துணிகளில் மொத்த வியாபாரமும் சில்லரை வியாபாரமும் சிறிது நடந்திருக்கிறது. விலைகளில் மாறுதலில்லை.

நூல் மார்க்கெட்டில் தேவைக் குறைவாகவிருக்கிறது. சென்ற இரண்டு வாரமாக ஜப்பான் நூல்கள் விசேஷமாக சென்னைக்கு வந்திருக்கின்றன. இதனால் ஒரு பரபரப்பு ஏற்பட்டு ஜப்பான் கலர்பால் (40 நெம்பர்) கொஞ்சம் விலை குறைந்திருக்கிறது. இந்தச்சரக்குகள் மார்க்கெட்டிற்கு வந்தபின் இன்னும் விலை குறையுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஜப்பானின் போட்டியினால் இந்திய நூல்களிலாவது, சீமை நூல்களிலாவது வியாபாரம் சில்லரையாக நடப்பதும் கஷ்டமாக விருக்கிறது.

---

விருக்கையில், போன மாதம் 25ம் தேதி (8—1—33) வக்ரிக்க ஆரம்பித்ததால் இதுவும் சிம்மத்திலேயே இருக்கிறது. இதுவும் குஜனும் மிகவும் அருகாமையில் இருப்பதை இரவு 11 மணிக்குப் பிறகு கிழக்கு ஆகாயத்தில் காணலாம்.

சனி:—இவ்வருஷ முடிவு வரையில் மகரத்திலேயே உலாவி வருகிறது.

உரானஸ், நெப்டியூன், ப்ளூடோ, முதலிய கிரஹங்கள முறையே மீனம், சிம்மம், மிதுனக் கூட்டங்களில் இருக்கின்றன. இவைகள் நம் பார்வைக்குப் புலப்படா.

சந்திரன் ஆகாயத்தில் சஞ்சரிக்கையில் கீழ்க் குறித்த தேதிகளில், கிரஹங்களின் அருகில் இருப்பதைக் காணலாம்

ஜனவரி 1933

16உ—குஜனருகில்
16உ—குருவருகில்
24உ—சுக்கிரனருகில்
25உ—புதனருகில்
26உ—சனியருகில்
31உ—உரானஸருகில்

பிப்ரவரி

12உ—நெப்டியூனருகில்
12உ—குஜனருகில்
13உ—குருவருகில்

# ஒழிவு நேர வேலை

(ஆத்ரேயன் எழுதியது.)

### ரூல்கழி.

காகிதத்தில் அநேக சம சதுரக் கோடுகள் வரைவதற்கு ரூல்கழி மிகவும் உபயோகமாயிருக்கிறது. இதை நாமே செய்து கொள்ளலாம். கடைசல் பட்டரையில் கடைந்துவிடலாம். அல்லது இழைப்புளியினலேயே இழைத்துவிடலாம். இழைப்பதில் பயிற்சி பெறவேண்டிய நமக்கு இரண்டாவது முறையே தகுந்தது.

இது செய்வதற்கு நம்மிடத்திலிருக்கும் ஆயுதங்களுடன் ஒரு கட்டை இழைப்புளி வேண்டும். சி 6 15' நீளமும் 1 1/8'' கனமும் உள்ள ஒரு ரூல்கழி காகிதத்தில் (புல்ஸ்காப், டெமி) எந்த வசத்திலும் கோடுகள் வரைய உபயோகப்படும். ஆகவே $15\frac{1}{2}'' \times 1\ 3/16'' \times 1\ 3/16$ அளவுகளுள்ள தேக்கு அல்லது நூக்கமாத்துண்டு இதற்குப் போதும். இழைத்தே இவ்வஸ்துவைச் செய்ய வேண்டியிருப்பதால் ஆரம்ப முதல் அதிஜாக்கிரதையாக இழைக்கவேண்டும். முதலில் மாத்துண்டை 1 1/8'' சரத்திற்கு இழைப்போம். சி 1. இது முதல் நிலே. இரு நுனிகளிலுமுள்ள கனமற்ற நீள அகல பக்கங்களுக்கு நேர் கோணமாக இருக்கும்படி அவைகளைச் சதுரிக்க வேண்டும். ஒரு நுனியிலிருந்து சுமார் ¼'' குறித்து ஒரு நீள ஓரத்திற்கு நேர்க் கோணமாக மூலே மட்டம் கிற்றூசியினல் ஒரு கோடு வரைந்து அந்தக் கோட்டை மற்ற 3 பக்கங்களிலும் குறுக்காக ஓரங்களுக்கு நேர்கோணமாக இருக்கும்படி வரைந்து அறுப்பது, சரியான மூலே மட்டமும் உபயோகித்துச் சட்டமும் நன்ருக இழைக்கப்பட்டிருந்தால் இந்தக் கோடு ஆரம்பித்த இடத்திற்கே வந்து சேரும் (சி 8) இந்தக் கோட்டிலிருந்து 15'' குறித்து மற்ருெரு நுனியிலும் இதே மாதிரி கோடு வரைந்து அறுப்பது.

இப்பொழுது 2 நுனிப்பக்கங்களிலும் அஷ்ட கோணங்கள் வரைய வேண்டும். சட்டத்தைச் செங்குத்தாகப் பிடித்து ராவியில் வைத்துப் பிடித்து மேலிருக்கும் நுனிப்பக்கத்தின் குறுக்கு மூலேகளைக் கோடுகளால் சேர்த்து கவராசத்தில் குறுக்கு மூலேக் கோட்டின் பாதி நீளத்தை எடுத்து (சி 4) 2 வது சித்திரத்திலுள்ளதுபோல் சதுரத்தின் ஒவ்வொரு மூலேயிலுமிருந்து அதன் இருபக்கங்களிலும் குறித்து அபபுள்ளிகளைக் கோடுகளால் சேர்த்தால் அஷ்ட கோணம் ஏற்படும். மற்ருெரு நுனியிலும் இவ்விதமாகவே ஒரு அஷ்ட கோணம் வரைந்து அஷ்டகோணங்களுக்கு உட்புறங்களின் பக்கங்களைத் தொடும்படியாக வட்டங்கள் வரையவேண்டும். இருபக்கங்களிலுமுள்ள அஷ்ட கோணங்களின் மூலேகளைச்




சேர்க்க நீள ஓரங்களுக்குச் சம தூரமாகக் கோடுகள் கீற்றுக் கட்டையால் கீறவேணடும். மூலேக் காடிக் கட்டையில் (சி 5) சட்டத்தை வைத்து ஒவ்வொரு மூலேயையும் அதன் இரு பக்கங்களிலுமுள்ள சம தூரக் கோடுகள் வரையில் இழைக்க வேண்டும். இவ்விதம் செய்தால் 4 பக்கங்களுள்ள சட்டம் 8 பக்கங்களுள்ளதாக ஆகும் (சி 2) நுனிப் பக்கங்களிலுள்ள வட்டங்கள் ரூல் கழியின் பருமனைக் காட்டுகின்றன. அஷ்ட கோணத்தின் ஒவ்வொரு மூலேயையும் கொஞ்சங் கொஞ்சமாக இழைத்துப் பதினறு மூலேகளுள்ளதாகவும் பிறகு முப்பத்திரண்டு மூலேகளுள்ளதாகவும் இவ்வாறே அடிக்கடி மூலேக் காடிக் கட்டையில் மாத்தைத் திருப்பித் திருப்பி வைத்துக் கொண்டு வட்டக் கோடுகளைத் தொடும்படி இழைக்க வேண்டும். இவ்விதம் இழைக்க அலகு மிகவும் குறைவாகத் தட்டியுள்ள கட்டை இழைப்புளி (சி 6) உபயோகமாக இருக்கும். இழைத்தே ரூல் கழியின் உருவத்தை உண்டாக்க வேண்டும். எவ்வளவு ஜாக்கிரதையாக இழைத்தாலும் அநேக சிறிய பட்டைகள் உள்ளதாகத்தான் இருக்கும். ஆகவே பட்டைகளைப் போக்கி சரியான உருண்டை வடிவத்திற்குக் கொண்டுவரச் சுரச் சுரப்பு காகிதத்தால் தேய்க்க வேண்டும். சுமார் 4'' சதுரமுள்ள சுர சுரப்புக் காகிதத்தை ரூல் கழியின்மேல் ஒரு சுற்றுச் சுற்றி ஒரு கையினல் பிடித்துக்கொண்டு மற்ருெரு கையினல் திருகித் திருகி இழுத்துத் தேய்த்தால் பட்டைகள் தேய்ந்து மழமழப்பாக இருக்கும். சுர சுரப்புக் காகிதத்தை எடுத்துவிட்டு ரூல் கழியை ஒரு கையில் வைத்து விரல்களினல மெதுவாகப் பிடித்துக் கொண்டு மற்ருெரு கையினல் மெள்ளத் திருகி இழுத்தால் மேடு பள்ளங்கள் கைக்கு நன்ருகத் தெரியும். நுனிகளிலுள்ள வட்டமான ஓரங்களைக் கோடி மாற்றவேண்டும். நூக்கமர

மாக இருந்தால் அதன்மேல் எண்ணெயைத் தடவி தேங்காய் நாரால் நன்ருகத் தேய்த்தால் பள பளப்பாக இருக்கும். தேக்கு மாமாக இருந்தால் டர்பண்டைனுடன் காய்ச்சின தேன் மெழுகைப் பூசித் தேங்காய் நாரால் தேய்க்க வேண்டும்.

பார்வைக்கு அழகாக இருப்பதற்காகச் சிலர் இரண்டுவித வர்ணங்களுள்ள நான்கு சதுர மாக் கம்பிகளை ஒன்று சேர்த்துச் சதுரமாக ஒட்டி மேற்சொன்ன முறைப்படி ரூல் கழி செய்வார்கள். இதில் ஒரே வர்ணமுள்ள மாங்கள் எதிர் மூலையிலிருக்கும். நூக்கு மாமும் தேக்குமாம் அல்லது வெள்ளை சீடர் மாமும் இதற்குத் தகுந்தவை. 5/8'' சதுரமும் 16'' நீளமுமுள்ள நான்கு மாக் கம்பிகள் ஒரே வர்ணமுள்ள கம்பிகள் எதிர் மூலையிலிருக்கும்படி 1¼'' சதுரத்திற்கு ஒட்டப்படுகின்றன. பிறகு சாதாரண ரூல் கழி போலவே அஷ்டகோணங்களும் வட்டங்களும் வரைந்து இழைத்து ரூல் கழியாகச் செய்யப்படுகிறது. கம்பிகளை ஒட்ட வஜ்ரம் உபயோகிக்க வேண்டும்.

### வஜ்ரமும் அதை உபயோகத்திற்குத் தயாரிக்கும் முறையும்.

வஜ்ரம் என்பது ஆடுமாடுகளின் கொம்பு குளம்பு தோல் முதலியவைகளிலிருந்து செய்யப்படும் வஸ்து. கடைகளில் விற்கப்படும் வஜ்ரத்துண்டுகள் சுமார் 7''×2½''×¼'' அல்லது 7''×1¼''×5/8'' அளவுகளுள்ளவை. ஒரு பவுண்டு வஜ்ரம் சுமார் 5 அல்லது 6 அணு இருக்கும். நல்ல வஜ்ரம் கண்ணுடியைப்போல் சுத்தமாயும் பள பளப்பாயும் நாற்றமற்றதாயும் நசுங்காமல் உடையக் கூடியதாயுமிருக்கும். அதன் மேல் ஈர விரலால் தேய்த்தால் எண்ணெய்போல் வழ வழப்பாயிராமல் பிசின்போல் ஒட்டிக்கொள்ளும்.

### வஜ்ரம் காய்ச்சும் முறை.

வஜ்ரத்தை சுண்டைக்காய் பருமனுள்ள துண்டுகளாக உடைத்து ஒரு பாத்திரத்தில் போட்டு அது முழுகுவதற்குப் போதுமான ஜலம் ஊற்றி ஒரு நாள் வைக்க வேண்டும். மறுநாள் அதை எடுத்து வஜ்ரசட்டியின் உள் பாத்திரத்தில் போட்டு வெளிப்பாத்திரத்தில் சற்றேறக்குறைய பாதி அளவுக்கு ஜலம் ஊற்றி அடுப்பில் வைத்துக் காய்ச்ச வேண்டும். சற்று நேரத்திற்கெல்லாம் வெளிப் பாத்திரத்திலுள்ள ஜலம் பொங்கி நீராவியாகும்போது ஆரம்பத்தில் கொஞ்சம் கெட்டியாக இருந்த வஜ்ரம் இப்பொழுது ஜலம் போல் உருகும். இவ்விதம் காய்ச்சின வஜ்ரத்தை உடனே உபயோகிக்கலாம்.

வஜ்ரம் காய்ச்சுவதற்காக ஏற்பட்ட பாத்திரங்களில்லாதவர்கள் ஒரு வாயகன்ற பாத்திரத்தில் ஜலம் ஊற்றி அதற்குள் ஒரு சிறிய பாத்திரத்தில் ஊறின வஜ்ரத்தை வைத்துக்காய்ச்சலாம். பொங்கும் ஜலம் வஜ்ரம் உள்ள பாத்திரத்திற்குள் வரக்கூடாது. சட்டி ஓடுகளில் ஊராத வஜ்ரத்தைப் போட்டு நேராக அடுப்பில் வைத்து எல்லோராலும் நன்ருகக் காய்ச்சமுடியாது. அப்படிக் காய்ச்சும் வஜ்ரத்திற்கு ஒட்டும் சக்தி கொஞ்சம் குறைவு. சூடாகவும் மெல்லியதாகவும் உள்ள வஜ்ரத்திற்குஒட்டும் சக்தி அதிகம். சரியாகக் காய்ச்சப்பட்ட வஜ்ரம் அதிக நேரமானல் சில சமயங்களில் கெட்டியாய் விடும். அப்பொழுது அதில் ஜலம் ஊற்றி மறுமுறை காய்ச்சலாம். ஆனல் அதன் ஒட்டும் சக்தி குறையும்.

ப்ரஷ்:—வஜ்ரத்தைமரத்தில் பூச நாமே ஒரு ப்ரஷ் செய்து கொள்ளலாம். சுண்டு விரல் பருமனுள்ள ஒரு பிரம்பை 6 அல்லது 7 அங்குலம் நீளம் வைத்து அறுத்து ஒரு நுனியைக் கருங்கல்லில் வைத்துச் சுத்தியால் நசுக்கவேண்டும். பிறகு ஒரு ஊசி அல்லது ஆணியினல் நார்களைத் தனித்தனியாக எடுத்துவிட்டால் அது ஒரு சிறந்த பிரஷ் ஆகும். அது தேய்ந்துவிட்டால் மறுபடியும் நுனியை நறுக்கிவிட்டு நசுக்கிக்கொள்ளலாம்.

புதிதாய்க் காய்ச்சின வஜ்ரத்தைக்கொண்டு மாத்தை ஒட்டினல் அது கெட்டியாய்ப் பிடிக்கும். உதாரணமாக இரண்டு மாச்சட்டங்களை ஒட்டுவதாக வைத்துக் கொள்வோம். சட்டங்களின் ஒட்டப்பட வேண்டிய பக்கங்களைச் சேர்த்து வைத்தால் ஒன்றுக்கொன்று ஒரு மயிரிழை இடைவெளி கூட இராமல் அவ்வளவு நன்ருக இழைக்க வேண்டும். அப்பக்கங்களில் வஜ்ரத்தைப்பூசி இரண்டையும் சேர்த்து வைத்து ஒன்றன்மேல் ஒன்று உரையும்படி சற்று தேய்த்தால் ஒரு சமயத்தில் இரண்டும் ஒட்டிக்கொள்வது போல் தோன்றும். அப்பொழுது இரண்டையும் சரியான இடத்தில் வைத்து நெருக்கிப் பிடித்தால் நன்ருக ஒட்டிக்கொள்ளும். மேஜை நாற்காலிகளின் இணைப்புகளுக்கு வஜ்ரம் பூசி இணைப்பது மிகவும் நல்லது. நன்ருகப் படியாத இணைப்புகளில் கெட்டியான வஜ்ரத்தை அடைத்து விட்டால் கெட்டியாகப் பிடிக்கும் என்று எண்ணுவது தவறு.

### மூலைக்காடிக் கட்டை.

(சி 5) 18''×3''×2'' அளவுகளுள்ள ஒரு துண்டின் அகலப்பக்கத்தில் போன்று ஒரு நேர் கோணக்காடி செய்யப்பட்டிருக்கிறது. ஒரு நுனியிலிருந்து 1½'' அங்குலத்திற்கு அப்பால் ¼'' கனமுள்ள ஒரு சக்கை குறுக்காகக் காடி அறுத்துப் புதைக்கப்பட்டிருக்கிறது. இது V காடியில் வைக்கப்பட்ட ரூல் கழியை நழுவிச்செல்லாமல் தடுக்கிறது. உளிப்பழக்கமுள்ளவர்கள் தாங்களே ஒன்று செய்து கொள்ளலாம். மற்றவர்கள் தெரிந்தவர்களைக் கொண்டு செய்து கொள்ளலாம்.

## ✓ மதிப்புரை

### பன்னியூர் படாடோப சர்மா.

ஸ்ரீமான் வடுவூர் கே. துரைஸாமி ஐயங்காரால் எழுதப்பட்டு ராயபுரம் எஸ். வத்ஸலா கம்பெனியால் வெளியிடப்பட்ட பன்னியூர் படாடோப் சர்மா அல்லது மயனுலக மதி மயக்கம் என்ற நாவல் ஒன்று வரப்பெற்ருேம். இதுவரையில் ஸ்ரீமான் துரைஸாமி ஐயங்காரால் எழுதப்பட்ட நாவல்களைப்போல் இல்லாமல் இந்த நாவல் புதிய முறையிலிருக்கிறது. ஆங்கிலத்தில் "ரெய்னுல்ட்ஸ் நாவல்கள்" பச்சையாய் எழுதப்பட்டிருப்பதில் பெயர்போனவையாகவிருக்கின்றன. அந்தத் தோரணையில் ஸ்ரீமான் துரைசாமி ஐயங்கார் சிருங்கார ரஸ நாவல் தொகுதி என்று ஆரம்பித்து அதில் முதலாவதாக இதை வெளியிட்டிருக்கிருர் நம் நாட்டுப் பழக்க வழக்கங்களின் மேன்மையை அறியாது பல நவீனப் படிப்பாளிகள் மேல் நாட்டு முறைகளையனுஷ்டிக்க முற்படுவதாலும் மேல் நாட்டுப் பழக்க வழக்கங்கள் இங்கும் நிலைபெற்று விடும்போல் தோன்றுவதாலும் மேல் நாட்டு நாகரீகத்தில் உள்ள சில கேவலமான அம்சங்களை நம் ஜனங்கள் அறிந்து அவை இங்கு தலைகாட்டாமல் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் ஸ்ரீமான் துரைஸாமி அய்யங்கார் இம்முயற்சியிலிறங்கியிருக்கிருர். அதற்கேற்றபடி இந்த நாவலில் தோன்றும் ஸ்திரீ புருஷர்களின் பெயர்களும் ஸ்தலங்களின் பெயர்களும் செய்கைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. புஸ்தகம் 428 பக்கங்களடங்கியது. விலை ரூ. 2-4-0.